


THE DESIRE OF A BEAUTIFUL WOMAN

VIPUL SAREES
WITH
OVER 200
NEW DESIGNS
EVERY MONTH
TO CHOOSE
FROM.
IN GORGEOUS
GEORGETTES.
CRISPAL
LA DONA.
LOVELY
CHIC CHIFFONS
& EXQUISITE
POLYESTER
PRINTS.

VIPUL
SAREES & FASHION FABRICS

VENART 199 GA



# கூட்டத்தை அசர வைத்த சோனியா!

● சென்னை நகரையே ஒரு 'கலக்குக் கலக்கும்' அளவுக்கு, ராஜீவ் காந்தியின் ஐம்பதாவது பிறந்த தினத்தையொட்டி, ஸ்ரீபெரும்புதூருக்கு வந்திருந்த சோனியா காந்தியை வரவேற்கும் போஸ்டர்கள்; கட்அவுட்கள்! காங்கிரஸில் எத்தனை கோஷ்டி என்று தெரியாதவர்கள், எத்தனை வித போஸ்டர்கள் என்று எண்ணிப் பார்த்துத் தெரிந்து கொண்டிருக்கலாம்!

● விழா தொடங்குவதற்கு வெகு நேரம் முன்பே, ப. சிதம்பரம் வந்து விட்டார். அவர்தான் விழா ஏற்பாடுகளை சூப்பர்வைஸ் பண்ணிக் கொண்டிருந்தார்.

● விழாவுக்கு, அருணாசலம், தங்கபாலு ஃபாரூக், ரங்கராஜன் குமாரமங்கலம், மூப்பனார், வாழப்பாடி, பிரபு, தவிர புதுவை முதல்வர் வைத்தியலிங்கமும் வந்திருந்தார். மந்திரக்கோல் சகிதம், கவர்னர் காருவும் ஆஜர். நோட்டபிள் மிஸ்ஸிங் புள்ளி, மணிசங்கர் ஐயர். தமிழக அமைச்சர்கள் யாருமே வரவில்லை!

● நிகழ்ச்சித் திடலில் ராஜீவ், சோனியா, ராவ் மூவருக்கும் பெரிதாய் ஒவ்வொரு கட்அவுட்.

● காந்திஜி, பட்டேல், தாகூர், லஜபத்ராய், போன்றவர்கள் பிறந்த ஊர்கள்; சுதந்திரப் போராட்டத்தில் இடம்பெற்று புகழடைந்த இடங்கள் - என 58 ஸ்தலங்களிலிருந்து மண். கங்கை முதல், காவேரி உள்பட பல நதிகளின் நீர் இவற்றை எடுத்துக் கொண்டு 180 இளைஞர்கள் டெல்லியிலிருந்து ஸ்ரீபெரும்புதூருக்கு யாத்திரையாய் வந்தார்கள்.

● தமிழ்நாட்டில் புனிதமண் எடுக்கப்பட்ட இடங்கள் : கன்யாகுமரி, நெல்லை, திருப்பூர், ராமேஸ்வரம், தூத்துக்குடி, சிவகங்கை, வேதாரண்யம், திருவண்ணாமலை.

● ஒரு மீட்டர் உயரமுள்ள ஏழு பீடங்கள் எழுப்பப்பட்டிருந்தன. (இவற்றின் மீது தூண்கள் கட்டவிருக்கிறார்கள்.) இந்த பீடங்களில் புனிதமண் மற்றும் நீரை ராஜீவ் குடும்பத்தினர் கொட்டினார்கள்.

● யாத்திரை வந்த இளைஞர்கள் ராஜீவ் காந்தியின் வண்ணப்படத்தை விழாப் பந்தலில் கூடியிருந்தவர்களிடையே விநியோகிக்க, அதனால் சலசலப்பு எழ, ப. சிதம்பரம் பட விநியோகத்தை நிறுத்தச் சொன்னார். விநியோகித்த இளைஞர் யாத்திரை ஏற்பாடு செய்த காங். எம்.பி. அனுவாலியாவிடம் போய் முறையிட, அவர், படங்களை விநியோகிக்கும்படி கூற, காங்கிரஸ் உட்கட்சிப் பூசல் அங்கேயும் விடவில்லை.

● சற்றும் எதிர்பாராத முறையில், சோனியா, விடுவிடுவென மக்களை நோக்கிச் சென்றதும், கூட்டத்தினருக்கு ஒரே உற்சாகம். கையசைத்தல், கைகுலுக்குதல், வணக்கம் கூறுதல், மனு வாங்கிக் கொள்ளுதல் என்று கூட்டத்தினரை அசத்தி விட்டார் சோனியா. கூடவே பிரியங்காவும், ராகுலும் கைகூப்பியும், கையசைத்தும் மக்களை உற்சாகப் படுத்தினர்.

● சோனியாவின் சுருக்கமான பேச்சு, வெகு டச்சிங். ''இதே இடத்தில்தான் மரணம் என்னிடமிருந்து என் கணவரைப் பறித்தது; என் மகனும், மகளும் தம் தந்தையை இழந்தனர்'' என்று சோனியா குறிப்பிட்ட போது, பழைய துயர சம்பவங்கள், மனத்திரையில் ஓடி மனதை அழுத்தின.

● கூட்டத்தில் கேட்ட சில கமெண்ட்ஸ் :

● ''இன்னாபா! காங்கிரஸுக்குக் கூட இத்தினி கூட்டம்!

● ''அம்மாவையும், புள்ளையங்களையும் பார்த்தியா! எம்.ஜி.ஆரு மாதிரியே கலரு!''

● ''காங்கிரஸுக்கு அடுத்த எலெக்‌ஷன்ல, ஓட்டு வாங்க ஆள் கிடைச்சிடுச்சி! இன்னா சொல்ற நீ!''

● ''செக்யூரிடி... செக்யூரிட்டின்னு இப்ப இவ்ளோ படுத்தி எடுக்கறாங்களே! அன்னிக்கு ஒழுங்கா இருந்திருந்தா, இது மாதிரி நிலைமையே வராம இருந்திருக்குமே!''

- எஸ். சந்திரமௌலி

படம் நன்றி : தினமலர்

# "நான் நிரந்தரத் தலைவன் அல்ல; நித்திய கண்டத் தலைவன்!"

● தங்கபாலு ஏன் ஜெ. பக்கம் சரிகிறார்?

● ஜெ. ஆட்சி ஊழலின் பரிமாணம் என்ன?

● என்ன கருத்து மாறுபாடு மூப்பனாருடன்?

● பிரத்யேக பேட்டியில் அலசுகிறார் வாழப்பாடி!

"உங்களுடைய அ.தி.மு.க. எதிர்ப்பு நிலையை விமர்சித்து, தங்கபாலு போன்ற உங்கள் கட்சி அமைச்சர்களே அறிக்கைகள் விடுவதற்கு என்ன காரணம்?"

"கட்சியின் வளர்ச்சிக்காக அவரும் அவரைப் போன்றவர்களும் அப்படிச் செய்யவில்லை. அவர்கள் தங்களின் தனிப்பட்ட லாபங்களுக்காகவே அ.தி.மு.க. ஆதரவு நிலையை எடுத்திருக்கிறார்கள்."

"தனிப்பட்ட லாபம் என்று எதைக் குறிப்பிடுகிறீர்கள்?"

"தங்கபாலுவின் குடும்பத்தார் கிரானைட் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். உதாரணத்திற்கு, சேலம் - ஆத்தூர் அருகிலுள்ள மஞ்சினி என்னும் ஊரில் உள்ள ஒன்றரை ஏக்கர் புறம்போக்கு நிலத்தை அவர்கள் வளைத்துப் போட்டிருக்கிறார்கள். இதற்கு மாநில அரசின் துணை வேண்டுமல்லவா! இதுபோன்ற சுயலாபங்களுக்காகத்தான் அவர் அ.தி.மு.கவை ஆதரிக்கிறார்!"

"இருபத்தைந்து கோடி ரூபாய் கொடுத்தால் அவர் தமது சொத்துக்களைக் கொடுத்து விடுவதாகக் கூறியிருக்கிறாரே?"

"ஆக, இருபத்தைந்து கோடி ரூபாய் அளவுக்குச் சொத்து வைத்திருக்கிறார் என்பதை அவரே ஒப்புக் கொள்கிறார். நான் கேட்பது அது எப்படி வந்தது என்பதுதான்? நானும் அவரும் பக்கத்துப் பக்கத்து ஊர்க்காரர்கள். ஒருவர் குடும்பம் பற்றி ஒருவர் மிக நன்றாக அறிவோம். அதனால்தான் கேட்கிறேன்! ஓர் அமைச்சர் என்கிற முறையில் அவரும் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறார்."

"இளைஞர் காங்கிரஸ் தலைவராகத் தமிழகத்தில் செல்லக்குமார் நியமிக்கப்பட்டதில் உங்களுக்கென்ன ஆட்சேபணை?"

"வழக்கப்படி, மாநில கட்சியின் தலைவர் என்கிற முறையில் என்னைக் கலந்து ஆலோசித்திருக்க வேண்டும். அப்படி அவர்கள் செய்யவில்லை. உத்திரபிரதேசத்திலும் அந்த மாநிலத் தலைவரான என்.டி. திவாரியைக் கலந்தாலோசிக்காமலே நியமித்தார்கள். அவர் அதை எதிர்த்தவுடன் நியமனத்தை வாபஸ் பெற்று விட்டது மேலிடம். அதைத்தான் நான் இங்கும் செய்யச் சொல்லுகிறேன்."

"செல்லக்குமார் மூப்பனார் ஆள் என்பதால் இப்படிச் சொல்லுகிறீர்களா?"

"இல்லை. எனக்கு யாராக இருந்தாலும் பிரச்னை இல்லை; என்னைக் கலந்து ஆலோசித்து விட்டு யாரை வேண்டுமானாலும் நியமியுங்கள்; ஏற்றுக் கொள்கிறேன் என்பதுதான் எனது நிலை."

"நெல்லையில் நடந்த விழாவில் ஜனதா தளத்திலிருந்த செங்காளியப்பன் இ. காங்கிரஸில் வந்து இணைந்தார். அது மூப்பனார் தலைமையில் நடந்தது. அதற்கு பதிலடியாகத்தான் செப்டம்பர்



24-ம் தேதி நீங்கள் மதுரையில் நடத்தவிருந்த விழாவென்றும் அதில் ராஜசேகரன் போன்றவர்களை இ. காங்கிரஸில் இணைத்துக் கொள்ள ஏற்பாடு செய்திருந்தீர்கள் என்றும் சொல்லப்படுகிறதே?"

"உண்மை அப்படியில்லை. ராஜீவின் பொன் விழா பிறந்த நாள் கொண்டாட்டங்களைத் தமிழ்நாடு முழுவதும் நடத்தக் கட்சி திட்டமிட்டிருக்கிறது. அதில் ஒன்றுதான் மதுரை விழா. அதில் ராஜசேகரன் போன்றவர்கள் இணைந்து கொள்ள விரும்பினார்கள்; அவ்வளவுதான். மற்றபடி அந்த விழாவில் கலந்து கொள்ள மூப்பனாருக்கு அழைப்பு அனுப்பினேன். அன்று தனக்கு கபிஸ்தலத்தில் முக்கியமான வேலை இருப்பதால் கலந்து கொள்ள இயலாது என்று பதில் எழுதி விட்டார். இப்போது விழா அக்டோபர் 15-ம் தேதிக்குத் தள்ளிப் போடப்பட்டு விட்டது. அப்போது கலந்து கொண்டு சிறப்பிக்கும்படி மூப்பனார், எஸ்.ஆர்.பி., தங்கபாலு, அருணாசலம் என்று அனைவருக்குமே அழைப்பு அனுப்பியிருக்கிறேன். மாநிலக் கட்சியின் தலைவர் என்கிற முறையில் அனைவரையும் அரவணைத்துச் செல்ல விரும்புகிறேனே தவிர, தனியொரு கோஷ்டியாகச் செயல்பட நான் ஒருபோதுமே விரும்பியதில்லை."

"காங்கிரஸ் சொந்தக் காலில் நிற்க வேண்டுமென்று 89-ல் தனித்துப் போட்டியிட்டதை நீங்கள் கடுமையாக விமர்சித்தீர்களே?"

"உண்மைதான். அப்போது மட்டுமல்ல; இப்போதும் கூறுகிறேன்... தமிழகத்தில் காங்கிரஸ் தனித்துப் போட்டியிட்டு வெற்றி பெற முடியாது. ஆயினும் காங்கிரஸின் கூட்டணி இல்லாமல் இங்குள்ள எந்த மாநிலக் கட்சியும் ஆட்சிக்கு வந்து விட முடியாது என்று உறுதியாகச் சொல்லுகிறேன். ஆக, ஆட்சிக்கு நம்முடைய கூட்டணி அவசியம் தேவை என்கிற நிலையில், நாம் கூட்டணி அமைக்கும் போது, ஆட்சியிலும் காங்கிரஸ் பங்குபெற வேண்டும்; அப்போதுதான் நாங்கள் கூட்டணி அமைத்துக் கொள்வோம் என்று நிபந்தனை போடலாம். இதை முன்பிருந்த தலைவர்கள் போடத் தவறி விட்டார்கள்."

"கடந்த பொதுத் தேர்தலில் நீங்கள் ஜெயலலிதாவுடன் கூட்டணி அமைத்துக் கொண்ட போது, ஏன் இந்த நிபந்தனையைப் போடவில்லை?"

"அன்றைய நிலையே வேறு. அப்போது மத்தியில் தேசிய முன்னணி ஆட்சியில் இருந்தது. மத்தியிலேயே நாங்கள் ஆட்சியிலில்லாத போது எப்படி நிபந்தனைகள் போட முடியும்? ஆனால் எம்ஜிஆர். அமெரிக்காவில்

சிகிச்சை பெற்றுக் கொண்டிருந்த சமயம், அ.தி.மு.க. என்பது காங்கிரஸ் போடும் நிபந்தனைகளை ஏற்றுக் கொள்கிற நிலையில் தான் இருந்தது. அப்போது கூட்டணி நிபந்தனையாக 'ஆட்சியில் பங்கு' என்பதை வலியுறுத்தியிருக்கலாம். அனைத்திந்திய காங்கிரஸின் மூத்த பொதுச் செயலாளர் என்கிற உயர்ந்த பதவியில் இருந்த மூப்பனார், கட்சியின் வளர்ச்சியை மனத்தில் கொண்டிருந்திருப்பாரானால் கட்சி மேலிடத்தில் இதை வலியுறுத்தியிருக்கலாம். அவர்களும் ஒப்புக் கொண்டிருந்திருப்பார்கள். மூப்பனார் ஏன் செய்யவில்லை? அவரைப் பொறுத்தவரை தமிழகத்தில் கட்சி வளர்கிறதோ இல்லையோ, அவருக்கு வேண்டிய ஆட்களுக்குத் தேர்தலில் போட்டியிட டிக்கெட் கிடைக்க வேண்டும்; அவ்வளவுதான். இதன் காரணமாகத்தான் இந்தியாவின் வேறு எந்த மாநிலத்திலும் இல்லாத அளவுக்கு - மேற்கு வங்கம் உட்பட - தமிழகத்தில்தான் கடந்த 27 ஆண்டுகளாகக் காங்கிரஸ் கட்சி ஆட்சியில் இல்லாமல் இருக்கும் நிலை ஏற்பட்டு விட்டது."

*"நீங்களும் சரி, மூப்பனாரும் சரி, ஜெயலலிதா தலைமையிலான அ.தி.மு.க. எதிர்ப்பு என்பதில் ஒன்றாக இணைந்தீர்கள். இப்போது மீண்டும் கோஷ்டிப் பூசல் தலைதூக்கியுள்ளதே?"*

"நான் மீண்டும் மீண்டும் இதையேதான் வலியுறுத்துகிறேன். அதாவது நான் ஒரு போதும் கோஷ்டி வளர்ப்பதில் கவனம் செலுத்துவதேயில்லை. கட்சியை வளர்ப்பதில்தான் கவனம் செலுத்துகிறேன். நானும் மூப்பனாரும் ஒன்றாகச் சுற்றுப் பயணம் செய்யலாம் என்று நான் அவருக்குப் பலமுறை அழைப்பு அனுப்பியிருக்கிறேன். அவர்தான் ஒத்துழைப்புத் தரவில்லை. தமிழகத்தில் காங்கிரஸ் 'மானத்தோடு வாழ வேண்டும்' என்று அவர் எழுப்பிய கோஷத்தைச் செயல்படுத்த நான் எப்போதும் தயாராகத்தான் இருக்கிறேன்; அவர்தான் தயாராக இல்லை."

*"நீங்கள் பாட்டாளி மக்கள் கட்சியில் சேரப் போவதாகச் சொல்லப்படுகிறதே?"*

"சொல்வது யார்? எனது விமர்சனங்களைத் தாங்கிக் கொள்ள முடியாதவர்கள் தான் அப்படியொரு புரளியைக் கிளப்பி விட்டுக் கொண்டிருக்கிறார்கள். நான் பதவியிலிருந்தாலும் இல்லாவிட்டாலும் நான் காங்கிரஸ் கட்சியை விட்டு ஒருபோதும் விலக மாட்டேன்."

*"உங்களுடைய மாநிலத் தலைவர் பதவி என்பது இதோ அதோ என்று ஊசலாடுவதாகச் சொல்லிக் கொண்டேயிருக்கிறார்களே?"*






"நான் 89-ல் பதவியேற்ற இரண்டாவது நாளிலிருந்தே இப்படித்தான் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இதுவரை ஒன்றும் நடக்கவில்லையே! அதற்காக நான் ஒன்றும் தமிழக காங்கிரஸின் நிரந்தரத் தலைவர் என்றும் சொல்லிக் கொள்ளவில்லை. எனது பதவி என்பது 'நித்திய கண்டம்; பூரண ஆயுசு' என்கிற மாதிரி தான். இன்றைக்கே மேலிடம் என்னைப் பதவியிலிருந்து விலக்கி விட்டு வேறொருவரை நியமிக்கலாம். அதை ஜனநாயக முறைப்படி செய்யுங்கள் என்பதுதான் எனது கோரிக்கையே தவிர, என்னை விலக்கக் கூடாது என்பதல்ல."

*"சுப்பிரமணிய சுவாமி ஜெயலலிதா அரசு மீது ஊழல் குற்றச்சாட்டுக்களைக் கூறிக் கொண்டேயிருந்தார். இப்போது நீங்கள் கூறிக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் மத்திய அரசு ஜெ. அரசு மீது எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லையே?"*

"நடவடிக்கை எடுக்கவில்லை என்பதால் குற்றச்சாட்டுகளை மத்திய அரசு ஏற்றுக் கொள்ளவில்லை என்றும் அர்த்தமில்லையே? 'மாநில அரசுகளைக் கலைக்க மாட்டோம்; ஆனால் அவை சரியாக நடந்து கொள்ள வேண்டும்!' என்றுதானே பிரதமர் கூறியிருக்கிறார். மத்திய அரசு மௌனமாக இருக்கிறது என்றால், குற்றச்சாட்டுகளைத் தீவிரமாகப் புலனாய்வு செய்து கொண்டிருக்கிறது என்றும் அர்த்தப்படுத்திக் கொள்ளலாமே?"

*"உண்மையிலேயே நீங்கள் ஜெ. அரசு மீது ஊழல் குற்றச்சாட்டுகளை ஆதாரங்களுடன்தான் சொல்லுகிறீர்களா?"*

"நிச்சயமாக. கவர்னரிடம் கொடுத்த பட்டியலோடு அதற்கான ஆதாரங்களின் தஸ்தாவேஜுகளையும் இணைத்துத்தான் கொடுத்திருக்கிறோம். 'வாய் புளித்ததோ மாங்காய் புளித்ததோ' என்கிற மாதிரி நான் எதையும் கூறுவதில்லை."

*"அப்படியானால் ஜெயலலிதா அரசில் இதுவரை குறைந்தது எத்தனை கோடி ரூபாய் அளவுக்கு ஊழல் நடந்திருக்குமென்று கருதுகிறீர்கள்?"*

"குறைந்தபட்சம் 1500 கோடி ரூபாய் இருக்கும். உதாரணத்திற்குச் சிலவற்றைச் சொல்லுகிறேன். ஒவ்வொரு முறை பஸ் கட்டணத்தை உயர்த்தும் போதும் பஸ் முதலாளிகளிடமிருந்து 15 கோடி ரூபாய் பெறுகிறார்கள். இதுவரை நான்கு முறை பஸ் கட்டணத்தை உயர்த்தியிருக்கிறார்கள். இந்தியாவில் தயாரிக்கப்படும் வெளிநாட்டு மது வகைகள் விஷயத்தில் சம்பந்தப்பட்ட முதலாளிகளிடமிருந்து மாதம் பத்துக் கோடி ரூபாய் கிடைக்கிறது. அப்புறம் பொதுப் பணித்துறையில் டெண்டர் விட்டே வேலைகள் நடப்பதில்லை. நீங்கள் பெட்டியோடு போய் அமைச்சர் கண்ணப்பனைப் பார்த்தால் போதும்; அவர் உங்களிடம் இரண்டு டெண்டர் பாரங்களைத் தருவார். ஒன்று உங்கள் பெயரில், இன்னொன்று உங்கள் பினாமி பெயரில் என்று இரண்டு தொகைகளை எழுதிக் கொடுத்தால் அதில் குறைவானதென்று சொல்லி உடனே உங்களுக்கு டெண்டர் கிடைத்து விடும். அவர்களுக்குத் தேவையெல்லாம் பத்து சதம்

# ஆ.வி. கக்கிய 'அமிர்தம்!'

வாசகர்களுக்கு ஒரு சின்ன விளக்கம் : ஜெமினி ஸ்டுடியோவில் தெலுங்கு பாமா விஜயம் படப்பிடிப்பில் நடந்த ஒரு சம்பவத்தை 'கல்கி'யில் நான் நினைவலைகளாக எழுதியிருந்ததைத் தொடர்ந்து **''கல்கி பத்திரிகையில் கே.பி. கக்கிய விஷம்''** என்று தலைப்பிட்டு தமது ஆனந்த விகடனில் இரண்டரைப் பக்கங்களுக்கு 'அமிர்தம்' கக்கியிருக்கிறார் மதிப்பிற்குரிய எஸ். எஸ். பாலன் அவர்கள்.

நான் இந்தக் கட்டுரைத் தொடரை எழுதும்போது, மிகுந்த கவனம் செலுத்தி, விவரங்களை ஒருமுறைக்கு இருமுறை சரிபார்த்துக் கொண்டுதான் எழுதி வருகிறேன்.

பத்திரிகை அதிபராக இருப்பதால் எந்த நேரத்திலும் யாரைப் பற்றியும், நக்கலாகவும், குத்தலாகவும் தொடர்ந்து தமது பத்திரிகையில் எழுதி, கலைஞர்களையும் மற்றவர்களையும் இவர்கள் மட்டும் புண்படுத்திக் கொண்டே இருக்கலாம். ஆனால் நடந்த ஓர் உண்மைச் சம்பவத்தை வார்த்தைக்கு வார்த்தை உண்மையாகவும் யாரும் எந்தவிதத்திலும் மனது புண்படாமலும் பாலசந்தர் எழுதும்போது மட்டும் ஆத்திரம் ஏன் மண்டிக் கொண்டு வருகிறது?

நான் இயக்கிய குறிப்பிட்ட அந்த தெலுங்குப் படம் Super flop என்று சொல்லி, தயாரித்த அவரே பெருமைப்பட்டுக் கொண்டிருக்கிறார். அதே நேரத்தில் நான் தமிழில் இயக்கிய நான்கு சூப்பர் ஹிட் படங்களை அவரே இந்தியில் இயக்கி அந்த நான்கு இந்திப் படங்களுமே Super flop என்கிற உண்மையைப் பெருந்தன்மையுடன் எழுதிப் பெருமைப்பட்டுக் கொண்டிருக்கலாம்.

கொழுப்பு, திமிர்பிடித்தவன் என்றெல்லாம் தொனிக்கும்படியாக அவரைப் பற்றி நான் எழுதியிருப்பதாக அவரே கற்பனை பண்ணிக் கொண்டு என் மீது சேற்றை வாரி இறைத்திருக்கிறார்.

அவர் தூற்றினாலும் சரி போற்றினாலும் சரி, அவர் மீது என்றென்றைக்கும் மிகுந்த மரியாதை வைத்திருப்பவன் நான்.

நிற்க :

எனது திரைப்பட விமர்சனங்களோ அல்லது என்னைப் பற்றிய செய்தியோ எதையும் இனி ஆனந்த விகடனில் வெளியிடுவதில்லையென்கிற அவர்களது முடிவை நானும் ஆனந்த விகடன் வாசகன் என்கிற முறையில் வரவேற்கிறேன்.

— கே. பாலசந்தர்

('நினைவலைகள்' 50 ஆம் பக்கம்)

'கமிஷன்'. அவ்வளவுதான். இந்தப் பத்து சதம் கமிஷனுக்காகத் தான் முதல்வரின் பயணத்துக்கென்று எம்.ஜி.ஆர். காலத்தில் வாங்கப்பட்ட ஹெலிகாப்டரைக் கிடப்பில் போட்டு விட்டு, இப்போது ஜெயலலிதாவுக்கென்று புதிதாக ஒரு விமானம் வாங்கத் திட்டமிட்டிருக்கிறார்கள். ஆக, இங்கு எல்லாத் திட்டங்களுமே பத்து சதம் கமிஷன் என்கிற அடிப்படையில்தான் தீட்டப்படுகின்றன!''

''இத்தனை ஊழல் குற்றச்சாட்டுகள் இருந்தும் மத்திய அரசு மௌனம் சாதிக்கிறதென்றால், ஒருவேளை தன்மீதே ஊழல் குற்றச்சாட்டுகள் உள்ளனவே என்கிற தயக்கமோ?''

''நிச்சயமாக இல்லை. பங்காரப்பா மேலும் சிக்கிம் முதல்வராயிருந்த பண்டாரி மேலும் நடவடிக்கை எடுக்கவில்லையா? தன் மீது குற்றச்சாட்டுகள் இருக்கின்றன என்பதற்காக மாநில அரசின் ஊழல்களைப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டுமா என்ன?''

''இப்படிப்பட்டதொரு சூழ்நிலையில் இனி தி.மு.க.வுடன் கூட்டணி வைத்துக் கொள்ளும் சாத்தியம் இருக்கிறதா?''

''யாரோடு கூட்டணி என்பதல்ல பிரச்னை. ஆனால், நான் முன்பே சொன்ன மாதிரி இனி காங்கிரஸுக்கு ஆட்சியில் பங்கு தருகிற கட்சியுடன்தான் கூட்டணி வைத்துக் கொள்ள வேண்டும் என்பதுதான் எனது நிலை.''

''உங்கள் நிலையை கட்சி மேலிடம் ஒப்புக் கொள்ளாவிட்டால்?''

''ஒப்புக் கொள்ளலாம்; ஒப்புக் கொள்ளாமல் போகலாம். அதுபற்றி எனக்குக் கவலையில்லை. நான் சொல்வது ஓர் உரத்த சிந்தனை. இதை கட்சி மேலிடமும் தொண்டர்களும் சிந்தித்துப் பார்க்க வேண்டும்; அவ்வளவுதான் நான் எதிர்பார்ப்பது.''

பேட்டி : இளங்கோவன், ப்ரியன்

படம் : யோகா

## உங்கள் மனைவியை இனிய ஆச்சரியத்தில் ஆழ்த்த மூன்று விஷயங்கள் கூடி வரவேண்டும்





## ஒரு நெக்லஸ்... அவர் பிறந்தநாள்... மற்றும்...

# ...மார்கதர்சி!

போன வருடம் ஒரு நாள், உங்கள் மனைவி நகைக் கடையில் அந்த நெக்லஸை ஆசையுடன் பார்த்து விலை கேட்டார். "நாற்பத்தைந்தாயிரம்" என்றார் நகைக் கடைக்காரர். உங்கள் மனைவி ஒரு மெலிதானப் புன்னகையுடன் நிறுத்திக் கொண்டார். அந்தப் புன்னகையை உங்கள் இதயத்தில் படம்பிடித்து வைத்திருக்கிறீர்கள்.

திடீரென்று ஒரு நாள் அந்த நெக்லஸை வாங்கிக் கொடுத்து அவரை எப்படி ஆச்சரியப்படுத்துவீர்கள்? அதற்குண்டான பணம் சேர வருஷக்கணக்கில் ஆகுமே! "இதுதான் மகிழ்ச்சியா?" என்று உங்களை நீங்களே அடிக்கடி கேட்டுக் கொள்ளும்படி இருக்கிறது.

உங்கள் கனவுகள் நனவாக மார்கதர்சி ஒரு வழிகாட்ட முடியும். சிட் ஃபண்டு மூலமாக...

உங்களுக்குத் தேவையான பெருந்தொகைகளைச் சுலபமாக அடையும் வழி. கடந்த முப்பத்திரண்டு ஆண்டுகளாக ஆந்திராவில் லட்சக்கணக்கானோர் மார்கதர்சியின் உதவி பெற்றுப் பயனடைந்துள்ளனர். இப்போது உங்கள் முறை!

உங்கள் செலவுகளுக்கேற்ப திட்டமிட்டுக் கொள்ள மார்கதர்சி சிட் ஃபண்ட் உங்களுக்கு உதவுகிறது. ஒவ்வொரு மாதமும் ஒரு குறிப்பிட்ட தொகையைச் செலுத்தி வரலாம். உங்களுக்குத் தேவை ஏற்படும்போது, செலுத்திய தொகையைக் காட்டிலும் மிக அதிகமான தொகையைக் கேட்டுப் பெறலாம். 'என், எதற்கு' என்று யாருக்கும் நீங்கள் விளக்கமளிக்க அவசியம் இருக்காது. நீங்கள் பெறக் கூடிய தொகையின் அளவை மற்றவர்கள் தீர்மானிக்கப் போவதுமில்லை. நீங்கள் சேரும் சிட் ஃபண்ட் திட்டத்தைப் பொறுத்து, பெறக் கூடிய தொகையின் அளவையும் அதைத் திரும்பச் செலுத்தும் தவணைகள் குறித்தும் நீங்களே முடிவெடுக்கலாம்.



மார்கதர்சி பற்றியும் அதன் சிட் ஃபண்ட் திட்டங்கள் பற்றியும் இன்னும் அதிகமாகத் தெரிந்து கொள்ள இன்றே எங்களை அணுகுங்கள்.

## மார்கதர்சி சிட் ஃபண்ட் (மெட்ராஸ்) லிமிடெட்,

ஏ 1 & 2, பார்சன் மானர்
602 அண்ணா சாலை, சென்னை – 600 006,
தொலைபேசி : 8266002

வாழ்க்கையைப் போல் உங்கள் தேவைகளும் நிஜமானவை!

32 வருடங்களாக ஆந்திராவில் முதன்மை பெற்று 27 கிளைகளுடன் விளங்கும் கம்பெனியின் சென்னை துணை நிறுவனம்.

# Kalki Shopping Page

# Kalki Shopping Page

## B.M. SILK SAREES




B.M. சில்க் சாரீஸ்
காஞ்சிபுரம்
பட்டுசேலை
தயாரிப்பாளர்:

தீபாவளி சிறப்பு தள்ளுபடி விற்பனை
நாள் : 1.10.94 To 2.11.94

5, வடக்கு மாட வீதி,
மைலாப்பூர்,
சென்னை - 600004.
Phone : 4940291

எங்களின் மாதாந்திர சீட்டு திட்டத்தில் சேர்ந்து பயனடையுங்கள்.

குறிப்பு : அனைத்து பட்டு சேலைகளும் தறி விலைக்கே கிடைக்கும்.

All Credit Cards Accepted.

## குண்டூசி

**48-வது ஆண்டு
தீபாவளி மலர்
1994**

சிந்திக்க வைக்கும் ஆன்மீகக் கட்டுரைகள், கவிதைகள், நல் உபதேசக் கதைகள், மற்றும் பல சிறப்பு அம்சங்களுடன் சுமார் 200 பக்கங்களுடன், ஆர்ட் பேப்பரில் நாலு வண்ணங்களில் சுவாமிகளின் படங்கள் முதலியவைகள் மன அமைதியும் மகிழ்ச்சியும் அளிக்கும் தெய்வீகப் புனித மலராய் வெளிவருகிறது.

**மலரின் விலை ரூ. 20/-**

*தபாலில் பெற விரும்புவோர் தபால் செலவு உள்பட ரூ. 22/- அனுப்பி அக்டோபர் 10-க்குள் பதிவு செய்து கொள்ளுமாறு வேண்டுகிறோம்.*

விவரங்களுக்கு : நிர்வாகி
குண்டூசி, சென்னை - 14.
தொலைபேசி : 846434

## தீபாவளி சிறப்பு தள்ளுபடி விற்பனை

**1.10.94 to 2.11.94**

மங்களம் பொங்கும் வைத்தியம்

## பர்வதா சாரீஸ்

ஜரிகை சுங்குடி
புடவைகள்
6 முதல் 9½ கெஜம் வரை

காஞ்சிபுரம் சொசைட்டி ஹவுஸ்
1, வடக்கு மாட வீதி
மைலாப்பூர், சென்னை - 4.

உறுதியான சாயம், தரத்தின் உறைவிடம்

## மூலிகைப் பொடி அழைக்கிறது

மூட்டுவலிக்கு மூலிகைப் பொடிகள்
மற்றும் காந்த சிகிச்சை

(ருமாடிசம், ஆர்த்தரைட்டிஸ், மூட்டுவலி, கீல் வாதம் குதிகால் வாதம்)

நாம் உண்ணும் உணவில் உரங்கள் கலப்பதால் உணவே நஞ்சாகி நம் உடலுக்கு பலவித பின்விளைவுகளை உண்டாக்குகிறது. எல்லா மூட்டுக்களிலும் வலி ஏற்படுகிறது. எலும்புகளுக்கும் மூட்டுகளுக்கும் வலு ஊட்டி தேய்ந்த எலும்புகளை வளரச் செய்து வலி பூரணமாக தீர நம்முன்னோர்களும் சித்தர்களும் கூறிய படி பின் விளைவற்ற தெய்வீக இயற்கை மூலிகைகளான அருகம்புல், முடக்கத்தான், நெருஞ்சில், கருந்துளசி, குப்பைமேனி, கரு நொச்சி, மகாவில்வம், உத்தாமணி, ஓரிதழ் தாமரை, அமுக்கரா, சீந்தில், வாத நாராயணன், வல்லாரை, கல்யாண முருங்கை, வெள்ளை கரிசாலை, பெருங்காயம், நில ஆவாரை, லச்சாகொட்டை கீரை, சுக்கு, மிளகு திப்பிலி, அதிமதுரம், சித்தரத்தை முதலிய பொடிகளை காலை மாலை அரை ஸ்பூன் வெறும் வயிற்றில் சாப்பிட்டு வருவதுடன் காந்த மூட்டுவலி பட்டை, உயர் சக்தி காந்தம், உபயோகித்து காந்த நீரும் அருந்தி வரலாம். இதனால் சுறுசுறுப்பாகவும், உற்சாகமாகவும் இருப்பர். மேலும் முன்னூறுக்கும் மேற்பட்ட மூலிகைகளுக்கும் மேற்குறிப்பிட்ட அனைத்து மூலிகைகளும் கலந்த 30கி பாக்கெட்களில் கிடைக்கும். தொடர்பு கொள்ளவும்.

SAKTHI NATURE CURE RESEARCH AND SERVICE CENTRE
1, YMCA BUILDING, ROYAPETTAH,
MADRAS -600 014. Ph: 831141


125 வது காந்தி ஜெயந்தியாமே! பரண் மேலே இருக்கிற காந்தி படத்தை எடுத்து துடைச்சி மாட்டி மாலை போட்டுடு!


அம்மா எவ்வளவு தூரம்தான் நடப்பீங்க... பல்லக்குல ஏறுங்க!
ஆ! திரும்பிப் பார்த்துட்டாங்க...! பல்லக்குல ஏறப்போறாங்க!
சோனியா காந்தி
ராஜ்ய ஆட்சியாளர்கள்
டி.எல் படையெடுப்பு




# கல்கி

1994
அக்டோபர் 2
பவ
புரட்டாசி 16
மலர் : 53
இதழ் : 9




# காந்தியை மறவாதிருக்க 125 வழிகள்!

அக்டோபர் 2. காந்திஜிக்கு 125வது பிறந்த நாள். மறப்போமா அவரை? வழக்கத்தை விடச் சிறப்பாகக் கொண்டாடி அமர்க்களப்படுத்தி விடுவோம்! தலைவர்கள் எல்லோரும் தனித்தனியே அறிக்கை விட்டு, சொற்பொழிவு நிகழ்த்தி, அண்ணலின் பெருமைகளைப் பலர் அறியப் பட்டியலிடுவோம். இப்படி அஞ்சலி செலுத்தினால்தானே மனச்சாட்சியின் உறுத்தலின்றி மறுநாள் முதல் வழக்கமான தகிடுதத்தங்களில் இறங்கலாம்!

'மதுவிலக்கு, மதுவிலக்கு' என்று அடித்துக் கொண்டாரே அண்ணல். அது நம் இதயத்திலிருந்து நீங்குமா? சாராயம் கள்ளத்தனமாகத்தான் பெருக்கெடுத்து ஓடுமே தவிர, பகிரங்கமாக அல்ல! ஒயின் ஷாப்களைத் தான் அனுமதிப்போமே தவிர, அதில் பார்களை மூடி விடுவோம்! விதம்விதமான விளம்பரங்களில் ரகம் ரகமான விஸ்கிகளின் பெயர்களைத் தாங்கிய சோடா அல்லது லெமனேட் விளம்பரங்கள்தான் வருமே தவிர, மற்றபடி இங்கே மது விளம்பரங்களுக்குச் சட்டப்படி தடைதான்!

மத ஒற்றுமையை நாளும் வற்புறுத்தினார் காந்திஜி. அதை என்றும் மறவோம். மசூதியை இடித்தால் கூட அந்த இடத்தில் ராமர் கோயில் கட்ட வேண்டும் என்ற நோக்கில்தான் இடிப்போம். "ஈசுவர அல்லா தேரே நாம்" என்று காந்திஜி நாள்தோறும் பிரார்த்தனைக் கூட்டத்தில் பாடவில்லையா? ஆக, மசூதியாக இருந்தால் என்ன கோயிலாக இருந்தால் என்ன. இரண்டும் ஒன்றுதானே!

"சத்தியம், தர்மம்" என்று வாய்க்கு வாய் சொன்னார் தேசத் தந்தை. எங்களுக்குத் தெரியாதா? கவரை பிரீஃப்கேஸ் ஆக்குவோம்; பிரீஃப்கேஸை ஸூட்கேஸாக்குவோம். ஆனாலும் வாங்குகிற லஞ்சத்துக்கு ஒப்புக் கொண்ட காரியத்தை சத்தியமாகச் செய்து முடிக்க முயற்சி செய்வோம். அதில் தர்மம் பிறழ 'மாட்டோம்.

உண்ணாவிரதத்தை எவ்வளவு சக்திவாய்ந்த ஆயுதமாகப் பயன்படுத்தினார் காந்திஜி என்பதை உலகமே அறியுமே! எனவேதான் எங்கள் தலைவியே கடற்கரை ஓரம் திடீர் உண்ணாவிரதம் ஆரம்பித்தார். சகல வசதிகளையும் அனுபவித்துக் கொண்டு நடத்திக் காட்டினார். உண்ணாவிரதத்தின் நோக்கம் நிறைவேறாமல் போனால் என்ன, மத்திய மந்திரி பறந்து வந்தாரா இல்லையா? ஆயிரக்கணக்கான மக்கள் தரிசனத்துக்குக் கியூவில் நின்றார்களா இல்லையா? ஆக மொத்தம் உண்ணாவிரதம் வெற்றிதானே! அது மட்டுமா? ஒருநாள் உண்ணாவிரதம், ஆறு மணி நேர உண்ணாவிரதம், தொடர் உண்ணாவிரதம், உண்ணா விரதத்துக்குப் போட்டியாக நடத்தப்படும் உண்ணும் விரதம் என்று உண்ணாவிரதக் கலையை வெகுவாக வளர்த்திருக்கிறோம். இன்று காந்தி இருந்தால் ஆச்சர்யப்பட்டுப் போவார்!

அந்நிய மோகம் கூடாதென்றார் மகாத்மா. அந்நியத் துணி பகிஷ்காரம் என்று மலையாகக் குவித்துக் கொளுத்தினார். அதனால்தான் கோகோ கோலா முதல் பர்மாஷெல் வரை சகலரும் இங்கே காலூன்ற அனுமதிக்கிறோம். அயல்நாட்டுப் பொருள்கள் இங்கே குவியக் குவிய, நமது காசு கரையக் கரைய, நாம் மோசம் போகலாமே தவிர மோகம் குறைந்து விடும் இல்லையா?

பிரும்மச்சரியத்தை வலியுறுத்தினார் தேசத் தந்தை. எனவே நமது இளைஞர்களுக்குப் புலனடக்கத்தில் பயிற்சி தரத்தான் டீவிக்களில் பல சேனல்களை ஆரம்பித்து எல்லாவித ஆபாசங்களையும் காணச் செய்கிறோம். கூடவே எய்ட்ஸ் பிரசாரம் செய்து, கருத்தடைச் சாதனங்களையும் விளம்பரப்படுத்துகிறோம். எவ்வளவு முன்யோசனை பாருங்கள்!

அஹிம்சை அவர் உயிர் மூச்சு. எனவேதான் வீரப்பனை இன்னும் பிடிக்காமல் இருக்கிறோம். புலிகளைத் தாராளமாக உலவ விடுகிறோம். கட்சிகளுக்குள்ளே கூட வீரத்தை வளர்க்கத்தான் எப்போதாவது அடிதடி சண்டை நடக்குமே தவிர, உட்பூசல் என்பது பெரும்பாலும் காலை வாரி விடுகிற கலைதான்; புழுதியை வாரி இறைக்கிற வேலைதான்.

'இரவு நேரங்களில் பெண்கள் தனியே செல்லும் சூழ்நிலை உருவாக வேண்டும்' என்றார். அந்தச் சூழ்நிலை உருவாக்கி விட்டோம். பெண்களுக்கு இப்போதெல்லாம் வீட்டிலேயும் போலீஸ் ஸ்டேஷனிலும்தான் பாதுகாப்பு இல்லையே தவிர, தெருவில் அப்படியொன்றும் ஆபத்தில்லை!

'அரசியலிலிருந்து இறையுணர்வைப் பிரிக்கவே கூடாது' என்றார். இந்த உபதேசத்தைத் தலைமேல் தாங்கி, எங்கள் முதல்வரையே ஆதி பராசக்தியாக்கி விட்டோம். எங்களை விடச் சிறந்த காந்தியவாதிகள் யார்!

தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

# ஹெய்த்தி சரணாகதி

மிரட்டி மிரட்டி ஒருவழியாக ஹெய்த்தி ராணுவத் தலைமையை சரணாகதி அடையச் செய்து விட்டது அமெரிக்கா.

'அமெரிக்க நாட்டின் பாதுகாப்புக்கு யாதொரு அபாயமும் இல்லாத போது, க்ளிண்டன் ஹெய்த்தி மீது ஏன் படை எடுக்க வேண்டும்? இன்னொரு நாட்டின் உள் விவகாரங்களில் ஏன் அமெரிக்க மக்கள் சிக்கிக் கொள்ள வேண்டும்?' என்றெல்லாம் அமெரிக்காவுக்குள்ளேயே எதிர்ப்பு இருந்த நிலையில், இப்படி ஒரு மூர்க்கத்தனமான முடிவை க்ளிண்டன் ஏன் எடுத்தார்?

கரீபியன் தீவு நாடான ஹெய்த்தியில், முறையாகத் தேர்தல் நடந்து, தேர்ந்தெடுக்கப்பட்டவர் அதிபர் ஜான் பெர்ட்ராண்ட் அரிஸ்டைட். மூன்று வருடங்களுக்கு முன் இதே செப்டம்பர் மாதம், அங்கு நடந்த ராணுவப் புரட்சி காரணமாகப் பதவியை விட்டுத் தப்பியோடி அமெரிக்காவில் தஞ்சம் புகுந்தார்.



• ஹெய்த்தி ராணுவ ஆட்சி தரும் பயிற்சி

இப்போதைய ராணுவத் தளபதி ரவுல் சித்ரஸ், ஐக்கிய நாடுகள் சபையின் சமாதானத் தூதுவர்கள் கூறிய சமரச ஆலோசனைகள் எதையும் ஏற்கவில்லை.

பாதுகாப்பு கவுன்சில் தீர்மானம் 940, அரிஸ்டைடை மறுபடி பதவியில் அமர்த்த எல்லா வகையான வழிகளையும் கையாள அனுமதித்திருக்கிற போது, அமெரிக்கா ராணுவ மிரட்டலை உபயோகிக்கச் சிறிதும் தயங்கவில்லை. படையெடுப்பை எதிர்த்து நிற்க ஹெய்த்தி ராணுவ ஆட்சியிடம் இருப்பதோ 7500 ராணுவ வீரர்களும், துருப்பிடித்த அரை டஜன் பீரங்கிகளுமே.

ஐக்கிய நாடுகள் சபையில், 'குறைந்தபட்ச ராணுவத்தை உபயோகித்து, ஹெய்த்தி ராணுவ ஆட்சியை வெளியேற்றுங்கள். ஹெய்த்தியின் இறையாண்மைக்குப் பங்கம் விளைவிக்காமலும், கரீபியன் பகுதியைச் சேர்ந்த இதர குட்டி நாடுகளுக்கு ஆபத்து ஏதும் வராமலும் பார்த்துக் கொள்ளுங்கள்!' என்று கூறிவிட்டது ரஷ்யா. 'மனித உரிமைகள் மீறலாகாது. எதைச் செய்தாலும், எப்படிச் செய்கிறார்கள் என்பது வெளிப்படையாக உலகுக்குத் தெரியும் வகையில் நடந்து கொள்ள வேண்டும்' என்று 'அம்னஸ்டி இன்டர்நேஷனல்' வேறு ஒப்புதல் தந்து விட்டது. பிறகு அமெரிக்க அதிபர் துணிவு பெறக் கேட்பானேன்?

நல்லவேளையாக போருக்கு அவசியமின்றி ராணுவ ஆட்சி இடத்தைக் காலி பண்ண சம்மதித்தது. பதினைந்துக்கும் மேற்பட்ட நாடுகள் தங்கள் படைகளை ஹெய்த்திக்கு அனுப்பியிருக்கின்றன, பங்களாதேஷ் உட்பட. இந்தியாவும் 5000 வீரர்களை அனுப்பும் என்று தெரிகிறது. அமெரிக்காவின் 20000 படை வீரர்களோடு இவர்களும் இணைந்து பணியாற்றுவார்களாம். (ஆனால் பாகிஸ்தான் தமது வீரர்களை அனுப்ப மறுத்து விட்டது!) அக்டோபர் 15க்குள் ராணுவத் தலைமை, பதவியை விட்டு விலகி, அரிஸ்டைடை அதிபர் ஆக நியமித்த பிறகு, இந்த அயல்நாட்டு வீரர்கள் அமைதிப் படை போலீசார் போல் இயங்க வேண்டும்.

நவம்பரில் வரும் இடைத் தேர்தலைக் குறிவைத்தே க்ளிண்டன் இந்த ராணுவ நடவடிக்கையில் இறங்கியதாகவும், இதில் கிடைக்கும் வெற்றி அவர் புகழை ஜில்லென்று உயர்த்தும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது. இது ஒருபுறமிருந்தாலும், "சூப்பர் பவர்களின் காலம் முடிந்து விட்டது; ஐ.நா.வைக் கேட்டுக் கொண்டு, மற்ற நாடுகளையும் சேர்த்துக் கொண்டுதான் அமெரிக்கா இதில் தலையிட முடிந்தது. 'இது ஒரு திருப்பம்தான்!" என்கிறார் ராணுவ - பாதுகாப்புத் துறை நிபுணர் கே. சுப்பிரமணியம்.

**சித்தார்த்**

படம் நன்றி : **நியூஸ்வீக்**



# மறுபக்க எம்.ஆர்.ராதா!

எம்.ஆர்.ராதா
வாழ்வில்
நடந்த
உண்மைச்
சம்பவங்களை
புட்டுப் புட்டு
வைக்கிறார்
அவரது
உதவியாளர்!

தின மலர்

## கதைமலர்

அக்டோபர் 1 இதழில் ஆரம்பம்!



# காந்தியின் அம்மா கஸ்தூரிபா!?

●● 'மகாத்மா காந்தியின் பெயர் என்ன?' என்ற கேள்விக்கு ஒரு மாணவி 'கஸ்தூரி பாய் காந்தி' என்று சிறிதும் யோசிக்காமல் பதில் கூறினார்.

'பஞ்சாப் சிங்கம்' என்றழைக்கப்படுபவர் யார்?'

பட்டேல், வீர சிவாஜி என்றெல்லாம் பதில்கள்!

'ஆஸ்கார் அவார்டு வாங்கிய முதல் இந்தியர் யார்?' என்ற மற்றொரு கேள்விக்கு, 'இரவீந்திரநாத் தாகூர், நேரு, சுபாஷ் சந்திரபோஸ், என்ற பதில்கள்! இவையெல்லாம் சென்னைத் தொலைக்காட்சி நடத்தும் 'சிந்திக்க ஒரு நொடி'யில் கேட்கப்பட்டவை.

'வினாடி-வினா' நிகழ்ச்சியில் எல்லா கேள்விகளுக்கும் பதில் தெரிந்திருக்க நியாயம் இல்லைதான்! அதற்காக நம் நாட்டைப் பற்றிய, சாதாரணமாகப் பேசப்படுகின்ற விஷயங்களைக் கூடவா நமது மாணவ மாணவியர் அறிந்து வைத்திருக்க மாட்டார்கள்? நமது கல்வித் தரம் உண்மையில் அதல பாதாளத்துக்குச் சென்று கொண்டிருக்கிறது என்பதை இனியாவது உணர்ந்து செயல்பட்டால் நல்லது.

சென்னை - 78, பூங்கோதை குப்புசாமி.

●● தமிழகத்திலுள்ள அனைத்துக் கோவில்களிலும், நுழைவாயிலருகில், எல்லோர் கண்ணிலும்படுமாறு கீழ்க்கண்ட விவரங்கள் காட்டும் ஓர் அறிவிப்புப் பலகையை மாட்டி வைக்க வேண்டும்.

1. கோவிலுக்குண்டான சொத்து விவரம் 2. வர வேண்டிய வருமானம், 3. குத்தகைக்காரர் பெயர் 4. அவர் முழு முகவரி 5. அவர் கொடுக்க வேண்டியது எவ்வளவு 6. கொடுத்தது எவ்வளவு 7. நிலுவை எவ்வளவு...

இந்தப் பட்டியலைக் காணும் பொது மக்களுக்குக் கோவிலின் வருமான இழப்பின் பரிமாணம் புரிவதுடன், அதை வசூலிக்க முயற்சி மேற்கொண்டு, தேவையானால் கிளர்ச்சி செய்யவும் உதவும். அது மட்டுமல்ல, குத்தகைக்காரர், நிலுவையை வைத்துக் கொண்டு தலைநிமிர்ந்து ஊருக்குள் நுழையவே தயங்குவார்கள்.

கோவை - 11, க. மாரியப்பன்.

●● ஒவ்வொரு வாரமும் "சூப்பர் ஹிட் முகாபலா" நிகழ்ச்சியில் இடம்பெறும் 'மைலாப்பூர் மாமியே, உன் மடிசாரைத்தான் காமியே...' என்ற பாடல் கீழ்த்தரமான ரசனையுடன் எழுதப்பட்டுள்ளது. இது வாரத்திற்கு வாரம் உயர்ந்த இடத்தைப் பெற்றுள்ளது என்பது மிகவும் வேதனைக்குரிய விஷயம். தமிழ்நாடு பிராம்மணர் சங்கம் உள்பட யாருமே இப் பாடலைக் குறித்து ஆட்சேபணைக் குரல் எழுப்பியதாகத் தெரியவில்லை. சினிமாப் பாடலாசிரியர்களுக்கு மறுபடி, மறுபடி ஒரு பட்டு மாமியும், கிட்டு மாமாவும்தான் அகப்பட்டார்களா? இந்த பாடலையே சிறிது மாற்றி வேறு ஜாதி அல்லது மதத்தவரைப் பற்றி எழுதிப் பார்க்கட்டும். இவர்கள் முதுகில் "டின்" கட்டி விடுவார்கள்!

சென்னை, ஆர். பிரேமா.

# முதலீடு செய்யுங்கள்; மூலதனம் பெருக்குங்கள்!

அண்மையில் பங்கு மார்க்கெட்டுக்கு வரவிருக்கும் இந்த நிறுவனங்களில் முதலீடு செய்வது லாபகரமாக விளங்கும்.

## ORIENTAL BANK OF COMMERCE

நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகளும் தங்கள் மூலதனத்தைப் பெருக்கிக் கொள்ள மக்களுக்குப் பங்குகளை விநியோகிக்கலாம் என்று நிதி அமைச்சகம் முடிவெடுத்திருப்பதாகத் தெரிய வருகிறது. சில காலம் முன் ஸ்டேட் பாங்க் இப்படி பங்குகளை விநியோகித்த போது பேராதரவு கிடைத்தது. தனியார் துறையில் உள்ள ஃபெடரல் வங்கி, நெடுங்காடி வங்கி போன்றவையும் பங்கு மார்க்கெட்டுக்கு மூலதனம் கோரி வந்தன. பாங்க் ஆஃப் மதுரை, கரூர் வைஸ்யா வங்கி, வைசியா வங்கி ஆகியவற்றின் பங்குகளின் மதிப்பு, மிக அதிகமாக உயர்ந்துள்ளது. இப்படிச் சூழ்நிலை மாறி வருவதற்கு ஏற்ப ஓரியண்டல் காமர்ஸ் வங்கியும் பங்கு மார்க்கெட்டுக்கு வந்து, ரூ. 10 பங்குகளை ரூ. 50 கூடுதல் விலைக்கு வழங்குகிறது. இவ்வாறு ஆறு கோடி பங்குகளை விநியோகித்து ரூ. 360 கோடி திரட்ட உத்தேசம். 31.3.94 முடிய இந்த வங்கியில் டெபாஸிட் ஆகியுள்ள தொகை ரூ. 5,239 கோடி. அதே நிதி ஆண்டில் 32 கோடி ரூபாய் லாபம் கண்டிருக்கிறது. பொதுவாகவே வங்கிகளின் பங்குகள் விலை மிக அதிகமாக உள்ளதால் இதுவும் லாபகரமான முதலீடாகவே விளங்கும். அக்டோபர் 5 முதல் விண்ணப்பங்கள் பெறப்படுகின்றன.

## TRIVENI SHEET GLASS WORKS

இந்தக் கல்கத்தா நிறுவனம், கட்டடங்கள், மோட்டார் கார்கள், பட ஃபிரேம்கள் போன்ற பற்பல உபயோகங்களுக்கும் ஏற்ப கண்ணாடிப் பாளங்களைத் தயாரிக்கிறது. ஆண்டு தோறும் விற்பனையும் கூடவே லாபமும் அதிகரித்து வந்திருக்கிறது. 1994 மார்ச் முடிந்த நிதி ஆண்டில் 32 சதவீதம் லாபப் பங்கீடு அளித்துள்ளது. தற்போது சீனத் தொழில் நுணுக்கத்துடன் ஒரு புதிய தொழிலகத்தை நிறுவத் திட்டமிடுகிறது. இதில் float glass என்ற விசேஷக் கண்ணாடி உருவாகும். நாள் ஒன்றுக்கு 200 டன் உற்பத்தி நடக்கும். இதற்கு ரூ. 150 கோடி தேவைப்படுகிறது. இதனைப் பகுதி அளவில் பங்குகள் விநியோகம் மூலம் பெற நினைக்கிறார்கள். ஒவ்வொரு பத்து ரூபாய் பங்கையும் ரூ. 100 செலுத்தித்தான் பெற முடியும். இவ்வாறு 16,62,300 பங்குகள் விநியோகமாகின்றன. நிறுவனத்தின் கடந்த கால செயல்பாடு, எதிர்காலத் திட்டங்கள், சந்தைத் தேவைகள் முதலியவற்றைக் கணக்கில் எடுத்தால் இதுவும் நல்ல முதலீடாகவே இருக்கும். அக்டோபர் ஏழாம் தேதி முதல் விண்ணப்பப் படிவங்கள் ஏற்கப்படும்.

## KANDAGIRI SPINNING MILLS

ஏற்கெனவே சேலத்தில் வெற்றிகரமாக இயங்கிவரும் பருத்தி நூலிழை ஆலை. 31.3.94 முடிந்த நிதி ஆண்டு இந்த நிறுவனம் ரூ. 162 லட்சம் லாபம் கண்டிருக்கிறது. பருத்தி நூலிழைக்குக் கிராக்கி அதிகரித்து வருவதால் நிறுவனம் விரிவாக்கத்தில் இறங்கியுள்ளது. தற்போதுள்ள 33,212 ஸ்பிண்டில்கள் தவிர புதிய ஆலையில் 49,532 ஸ்பிண்டில்கள் நிறுவ உத்தேசம். இதற்கு ரூ. 17.75 கோடி தேவை. பொது மக்களுக்கு ரூ. 10 பங்குகள் ரூ. 40 கூடுதல் விலையில் விநியோகமாகின்றன. 11,36,500 பங்குகள். இதுதவிர ஏற்கெனவே பங்குதாரர்களாக உள்ளவர்களுக்கு உரிமைப் பங்குகளும் உண்டு. நிதி நிறுவனங்கள் ரூ. 650 லட்சம் கடன் வழங்குகின்றன. ஏற்கெனவே லாபகரமாக நடந்துவரும் இந்த நிறுவனம் பங்கு மார்க்கெட்டில் நல்ல ஆதரவு பெறுவது நிச்சயம். நல்ல முதலீடு.

## SHRIRAM CITY UNION FINANCE LTD.

சென்னை, ஸ்ரீராம் குருப் நிறுவனங்கள் மிகவும் பிரபலமானவை. ஸ்ரீராம் இன்வெஸ்ட்மெண்ட்ஸ்; ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட்; ஸ்ரீராம் சிட்ஸ் முதலானவை. தவிர, ஸிடி யூனியன் வங்கியுடன் இணைந்து ஸ்ரீராம் ஸிடி யூனியன் ஃபைனான்ஸ் என்ற நிறுவனமும் செயல்பட்டு வருகிறது. தவணை முறையில் லாரி, பஸ் போன்றவை வாங்க உதவுவதும் குத்தகை முறையில் இயந்திரங்கள், ஏ.ஸி. யூனிட் போன்றவை பெற வசதி செய்வதும் நோக்கங்கள். ஏற்கெனவே லாபகரமாக நடந்து, டிவிடெண்டுகள் வழங்கி வரும் ஸ்ரீராம் குருப்பில் ஜி. வி. ராமன், லால்குடி ஜெயராமன், வி. ஆர். லக்ஷ்மி நாராயணன் போன்ற பெரிய புள்ளிகள் டைரக்டர்களாக உள்ளனர். தற்போது ஸ்ரீராம் ஸிடி யூனியன் நிறுவனத்தின் பணிகளை விரிவாக்கம் செய்யக் கருதி மூலதனத்தைப் பெருக்க எண்ணுகின்றனர். பத்து ரூபாய் பங்குகள் ரூ. 10 கூடுதல் விலைக்கு விநியோகமாகின்றன. இவ்வாறு 20 லட்சம் பங்குகள் வழங்கி ரூ. 4 கோடி திரட்ட உத்தேசம். பொதுவாகவே நிதி நிறுவனங்கள் நன்கு இயங்குகின்றன. நல்ல முதலீடு.

- வி. கோபாலன்

பனிமலரின் பொலிவு;
படிக்கப் படிக்க நிறைவு!





# கல்கி

## தீபாவளி மலர்–94

• வண்ணப்படம் : கோபிநாத்

● அருமையான சிறுகதைகள்; அமரர் கல்கியின் நெடுங்கதை; வைக்கம் முகமது பஷீரின் குறுநாவல்

● நவீன ஓவியங்கள் – ஆதிமூலம், மருது, பாஸ்கரன், பழனியப்பன்.
பரம்பரைப் பாணியில் – மணியம் செல்வன், லதா, மாருதி, எஸ். ராஜம்.

● கருத்தைக் கவரும் கவிதை மடல் – மனுஷ்யபுத்ரன், மதிவண்ணன், பொன்மணி வைரமுத்து.

● மறக்க முடியாத பயணக் கட்டுரைகள் – அமைதிப் பள்ளத்தாக்கு, பத்ராசலம், முத்யால மடுவு.

● பரவசமூட்டும் பக்தி கட்டுரைகள் – சுசிசிவம், ஆனந்தி, கமலமனராஜன்.

● வசீகரிக்கும் வண்ணப்படங்கள் : யோகா, உத்ரா, கோபிநாத், அமிர்தம், தம்பையா.

● நுண்கலைகள் பற்றிய அதிசயத் தகவல்கள் : கர்நாடக இசையின் பாரம்பரியம், திருவிழா தேர்களுக்குப் பெருவாழ்வு தருவோம்.

● சிரிக்க வைக்கும் கேலிச் சித்திரங்கள் : மதிகுமார், நடனம், செல்லப்பன், சுதர்ஸன், விசு, குமார்.

விலை ரூ. 40/-. பதிவுத் தபாலில் பெற ரூ. 8/- சேர்த்து அனுப்பவும். இன்றே உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளுங்கள்; அல்லது கீழ்க்கண்ட முகவரிக்குத் தொகையை அனுப்புங்கள்.

நிர்வாகி, கல்கி,
சென்னை - 97.




ரெடி,
ஸ்டெடி,
ஷூட்!

# துப்பாக்கி ரெடி; மெடல்கள் குறி!

ஹிரோஷிமாவில் நடக்க இருக்கும் ஏஷியன் கேம்ஸில் பங்கெடுத்துக் கொள்ளப் புறப்பட்டுக் கொண்டிருந்தார் துப்பாக்கி வீராங்கனை ரூபா உண்ணி கிருஷ்ணன்.

"அக்டோபர் 6 ஆம் தேதிதான் ஆரம்பம். ஆனால் இந்தப் பன்னிரண்டாம் தேதியே டெல்லிக்குப் போக வேண்டும். தில்லியிலிருந்து 26 ஆம் தேதியே ஹிரோஷிமாவுக்குப் புறப்பட்டாக வேண்டும்!"

"இத்தனை சீக்கிரம் போய் என்ன செய்வீர்கள்?"

"அதுதான் என் சங்கடமே! டெல்லியில் ஸ்டேடியத்தில் போய்த் தங்க வேண்டும். புறப்படுகிறவரை ஷூட்டிங் பயிற்சிக்குப் போய் வர வேண்டும். ஆனால் அங்கே கோச் எவரும் கிடையாது! ஷூட்டிங் ரேஞ்ச் போய்ச் சேருவதற்கே ஒரு மணி நேரம் ஆகிவிடும். போய் ஒரு மணி நேரம் பிராக்டிஸ் செய்வதற்குள், 'ஸ்டேடியத்துக்குத் திரும்ப வேண்டும். போதும், புறப்படு!' என்பார்கள். இந்த லட்சணத்தில் என்ன பயிற்சி செய்ய முடியும்? கேட்டால் அதுதான் சென்ட்ரலைஸ்ட் காம்ப். அங்கே வந்து தங்கி விட்டுத்தான் புறப்பட வேண்டும் என்கிறார்கள்!"

கேட்க வருத்தமாகத்தான் இருந்தது.

கனடா நாட்டில், வான்கூவர் நகருக்கு அருகே உள்ள மேற்குக் கடற்கரைத் தீவு விட்டோரியா. பிரிட்டிஷ் கொலம்பியாவின் தலைநகரம். இங்கு நடந்த பதினைந்தாவது காமன்வெல்த் போட்டியில் கலந்து கொண்டு சமீபத்தில்தான் திரும்பினார் ரூபா.

"டூரிஸ்ட்டுகளின் சொர்க்கம் விட்டோரியா. நகரம் முழுதும் ஏராளமான பூங்காக்கள். எனது பிரயாணம், வசதிகள் எல்லாமே முதல் தரமாக இருந்தன. தங்குவதற்கு இடம், சுத்தமான உணவு எல்லாம் பாராட்டும்படி இருந்தன." என்கிறார் ரூபா.

இந்தியாவிலிருந்து ஐந்து துப்பாக்கிப் பெண்கள் கலந்து கொண்ட இந்த காமன்வெல்த் கேம்ஸில் ரூபாவுக்கு இரண்டு தாமிரப் பதக்கங்கள் கிடைத்தன. குஹேலி கங்கூலியுடன் சேர்ந்து ஒரு தாமிரப் பதக்கம் வாங்கியதுடன் முக்கிய தனிப் போட்டியில் வெள்ளிப் பதக்கமும் வாங்கியிருக்கிறார். அதாவது உலகப் பெண்களிடையில் இரண்டாவது இடம் - (முதல் இடமும் தங்கப் பதக்கமும் கனடா நாட்டு ஷரன் போல்ஸூக்கு.)

ரூபா வெள்ளிப் பதக்கம் வென்ற செய்தி கிடைத்த அன்று, சென்னை ரைஃபிள் கிளப் கூட்டம் நடந்து கொண்டிருந்ததாம். கிளப் உறுப்பினர், ஓர் அகில உலகப் போட்டியில் கலந்து கொண்டு, இரண்டாவதாக வந்து வெள்ளிப் பதக்கம் பரிசு பெற்றது குறித்து, ஒரு பாராட்டுக் கூட யாரும் தெரிவிக்கவில்லையாம்!

"நீங்கள் முதல்வர் ஜெயலலிதாவைப்

பார்த்த போது என்ன உதவி வேண்டும் என்று கேட்டீர்கள்?"

"ஜூலை 28 ஆம் தேதி அன்றுதான் முதலமைச்சரைப் பார்த்தேன். ஆகஸ்ட்டில் நடந்த காமன்வெல்த் போட்டிகளுக்கான உதவி கேட்பது என்பது காலம் கடந்தது. எனவே அவர், "என்ன வேண்டும் ரூபா?" என்று கேட்ட போது, "உங்கள் ஆசிதான் முதலில் வேண்டும்" என்றேன். என்னை மாநில அரசு தத்து எடுத்துக் கொண்ட பிறகு, சில உதவிகள் கிடைக்கக்கூடும். பயிற்சிக்கான அம்யுனிஷன், புதிய, நவீன துப்பாக்கியை இறக்குமதி செய்து கொள்ள நிதி வசதி எல்லாம் கிடைக்கும் என்று தெரிகிறது. மாதாந்திர கௌரவ அன்பளிப்பும் ஒரு வருடத்துக்குக் கிடைக்கலாம். மத்திய அரசு விமானச் செலவை ஏற்காத பட்சம், அயல்நாட்டு முக்கியப் போட்டிகளில் கலந்து கொள்ள தமிழ்நாடு அரசு உதவி செய்யும். இப்போது ஹிரோஷிமாவுக்குப் போகவும் தமிழக அரசுதான் உதவப் போகிறது!"

நாம் உபயோகிக்கும் துப்பாக்கி, மிகப் பழையது என்றார் ரூபா. இதை விட நவீனமான துப்பாக்கிகளை எடுத்துக் கொண்டு போட்டிகளுக்கு எல்லாரும் வரும் பொழுது, தமது நிலையை எண்ணி வருத்தப்படுவாராம்.

காமன்வெல்த் போட்டிகளில் கலந்து கொண்டு பதக்கம் பெற்ற ஒரே பெண் மணியாய் இருந்தும் கூட இங்கே கிடைத்த பாராட்டு நிறைவானதாக இல்லை என்ற குறையும் இருக்கிறது ரூபாவுக்கு.

இதையும் விட வருத்தமான விஷயம்... 1990 ல் தெற்கு ஆசியப் போட்டிகளில் பங்கெடுத்துக் கொண்டு மூன்று தங்கப் பதக்கங்களும் வெள்ளிப் பதக்கமும் பெற்று இந்தியாவின் பெயரை தங்கப்பதக்கப் பட்டியலில் சேர்த்தார் ரூபா. அப்போது மத்திய அரசால் வாக்களிக்கப்பட்ட 45000 ரூபாய் இன்னமும் அவர் கைக்கு வந்து சேர்ந்தபாடில்லை!

ஜெயலலிதா அரசாவது தடங்கல்கள் எதுவும் இல்லாமல் வேண்டிய உதவிகளைச் செய்யட்டும்.

- சித்தார்த்

படம்: கோபிநாத்

## அரிதிமுபதநீ.....

ரவுடி வேஷம் தவிர வேறெதற்கும் தான் லாயக் இல்லை என்று பார்த்திபனே முடிவு செய்து விட்டார் போலும். பாருங்கள், படம் முழுக்க சாராய ஆறு ஓடவிட்டு, மெட்ராஸ் தமிழ் உலவவிட்டு, காலேஜ் கன்னியரை வம்பிழுத்து, பல அர்த்தப் பாடல்களை மெட்டெடுத்து...

கதையே இல்லாமல் 'வெறும் துணுக்குக் காட்சிகளை வைத்தே ஒரு படமாக்குவது சாதனை என்றால் இதுவும் ஒரு சாதனைதான்.

கண்ணில் படும் பெண்களையெல்லாம் 'டபாய்க்கும்' பார்த்திபனை ரோஜா 'டபாய்க்கிறார்' என்று வேண்டுமானால் கதையை ஒருவரிப்படுத்தலாம்.

பளபளவென்று ஸ்கிரீன் முழுக்க வியாபிக்கும் ரோஜாவுக்கு, முன்னைக் இப்போது நடிக்கவும் வருகிறது. ஆகவே, இனியும் ஆடைக் குறைப்பில் அதிக கவனம் செலுத்த வேண்டிய அவசியமில்லை என்பதை அறிக.

கச்சாமுச்சாவென்று ஏராளப் பாடல்கள். ஒன்றாவது மனசில் ஒட்டாததற்கு இளையவர் என்ன பதில் சொல்லப் போகிறார்?

படத்தில், பாராட்டுதலுக்குரிய ஒரு விஷயம் உண்டென்றால்; மணி கண்டனின் ஒளிப்பதிவு, வெகு அநாயாசமான லைட்டிங் மற்றும் ஆங்கிள்கள்.

கடைசி கடைசியாக பார்த்திபனுக்கு ஒரு வார்த்தை :

புதிய பாதை ஓடியது, அந்த கேரக்டர் ஒரு ரவுடியாக இருந்ததால் மட்டும் அல்ல!

-ஆர்.பி.ஆர்



14

இந்திர பிரஸ்தத்தில் விலங்குகளுக்கும் பல மொழிகள் தெரியும்; குறிப்பாக, பூனை. அது ஒவ்வொரு தடவையும் 'மியாவ்' என்று கத்தும்போது, ஒவ்வோர் ஒலியும் வெவ்வேறு மொழியின் வெளிப்பாடு! ('பூனை மொழியில்' - டாக்டர் ராக்வெல், டாக்டர் புன்டர்ட், டாக்டர் க்ரீஸன் - பக். 237 - 238).

இந்திர பிரஸ்தத்துத் தலைவர் அலுவலகத்திலிருந்து வர இருந்தவரை வரவேற்க அபூர்வா பத்து மணிக்கே தயாராக இருந்தாள்.

பொருத்தமாக அவள் அணிந்திருந்த புடைவை, அவள் மேனி நிறத்தைத் தனித்து எடுத்துக் காட்டியது. அதற்குப் பொருத்தமான சோளி அவள் பார்ப்பதற்கு ஒரு புது மலர் போலிருந்ததாக வனிதாவுக்குப் பட்டது.

"அம்மாடி! என் கண்ணே படும் போல இருக்குது" என்றாள் வனிதா புன்னகையுடன்.

"ஏன் இப்படி சிவப்பு நிறத்தைப் பத்தி ஒரு 'அப்செஷன்' உங்களுக்கெல்லாம்? சிவப்பா இருந்தா போதும்னு நினைக்கிறேன், வேதபுரத்துத் தலைவரா வந்துடலாம்" என்றாள் அபூர்வா.

"நல்லவேளை இங்கே சொன்னீங்க, நம்ம ஊர்லே சொல்லிருந்தீங்க, உங்களைத் தலைவருக்குப் போட்டின்னு ஜனங்க இழிச்சுப் போட்டிருப்பாங்க..."

"நம்ம தலைவர் என்ன நிறம்னு யாருக்குத் தெரியும்?"

"சேப்பாத்தானிருக்கணும்... இல்லாட்டா, எப்படித் தலைவரா ஆயிருப்பாரு? பாத்தா தெரியலியா?"

வாசல் மணி ஒலித்தது.

மணி பத்தே முக்கால்.

"அரைமணிக்கு முன்னாலேயே வந்திருப்பாரு போலிருக்குது... வாசலிலே உலாத்திட்டு, கரெக்டா பத்தே முக்காலுக்கு மணி அடிக்கிறாரு..." என்று கூறினாள் வனிதா.

கிஷன் சந்த் வந்தான். "மேடம், உங்களைப் பார்க்க..."

"சரி வரச் சொல்" என்றாள் வனிதா. உள்ளே வந்தவர் நீளமான ஒரு சாய்ந்த நேர் கோடு போலிருந்தார். கண்ணாடி, மைனஸ் ஏழு அல்லது எட்டிருக்கலாம். முகத்தில் தெரிந்தது புன்னகையா, வேதனைக் குறிப்பா என்று கண்டு பிடிப்பது கஷ்டமாக இருந்தது.

"குட்மார்னிங், மேடம்."

அவர் குரல் கரகரத்திருந்தது. முகத்தில் தெரிந்த அந்தக் குறிப்பு தொடர்ந்து இருந்த காரணத்தால் அது புன்னகையாகத்தான் இருக்க வேண்டுமென்று அபூர்வாவுக்குப் பட்டது.

அவரைத் தொடர்ந்து இருவர் ஆறு பெரிய அட்டைப் பெட்டிகளை எடுத்துக் கொண்டு வந்தனர். ஐந்துக்கு ஐந்தடி அளவிலிருந்த பெட்டிகள்.

அவர்கள் அப் பெட்டிகளைக் கீழே இறக்கினர்.

பரிசுப் பொருள்களோ? வேதபுரத்துத் தலைவருக்காக இருக்கலாம். அக்காலத்து அரசர்கள் ஒருவரையொருவர் சந்திக்கச் செல்லும் போது, பரிமாறிக் கொள்வதில்லையா?

"இது என்ன?" வனிதா வெளிப்படையாகவே கேட்டு விட்டாள்.

வந்தவர் அபூர்வாவைப் பார்த்தார். 'இவளுக்கு நான் பதில் சொல்ல வேண்டுமா?' என்று வினவும் பார்வை.

"வனிதா என் காரியதரிசி. அவளைக் கூட வைத்துக் கொண்டுதான் நான் எந்த ரகசியமாக இருந்தாலும் விவாதிப்பது வழக்கம்," என்றாள் அபூர்வா.

"ஓ.கே... இவை அரசாங்கக் கோப்புகள்."

"அத்தனையுமா?"

"இன்னும் ஏராளமாக எங்கள் அலுவலகத்து 'ஸ்ட்ராங் ரூமி'லிருக்கின்றன. ஒரு சிலவற்றை, முக்கியமான வற்றை மட்டுந்தான் கொண்டு வந்துள்ளேன்."

"எதைப் பற்றிய கோப்புகள்?"

"கஜானா காணாமல் போனது பற்றி விசாரிக்க எங்கள் தலைவர் ஒரு கமிஷன் நியமித்தார். அக் கமிஷன் அறிக்கையை விசாரிக்க இன்னொரு கமிஷன். இவ்வாறு ஆறு கமிஷன்கள். அவற்றின் அறிக்கைகளை வைப்பதற்கென்றே ஒரு தனிக் கட்டடமிருக்கிறது, 'ஸ்ட்ராங் ரூம்' களுடன். நான் கொண்டு வந்திருப்பன அவற்றில் சில..."

"போதும், இவற்றைப் படித்து முடிக்கவே ஓர் ஆயுள் காலம் போதாது போலிருக்கிறதே" என்றாள் வனிதா.

"இது உங்கள் ஆயுள்காலம் எவ்வளவு என்பதைப பற்றிய பிரச்னை. இதை நான் விவாதிப்பது பொருத்தமாக இருக்காது. சரி நீங்கள் போகலாம்" என்று உடன் வந்த ஆட்களிடம் அவர் கூறினார்.

அவர்கள ஒரு ராணுவ 'சல்யூட்' அடித்து விட்டு அகன்றார்கள்.

"நான் உட்காரலாமா, மேடம்?"

"ப்ளீஸ்," என்றாள் அபூர்வா.

"உங்களுக்கு யார் மீது சந்தேகம்?"

"எனக்கா? எதைப் பற்றி" என்று திடுக்கிட்டுக் கேட்டார் அவர்.

"உங்களுக்கில்லை, அரசாங்கத்துக்கு. கஜானா காணாமல் போயிருக்கிறதே. அதைப் பற்றிக் கேட்கிறேன்."

"முதல் கமிஷன் அறிக்கையின்படி எல்லார் மீதும். இரண்டாவது கமிஷன் மறு அறிக்கையின்படி ஒருவர் மீதுமில்லை. மூன்றாம் கமிஷன் அறிக்கையின்படி அமைச்சர்கள் மீது. நான்காவது கமிஷன் அறிக்கையின்படி அரசாங்க அதிகாரிகள் மீது. ஐந்தாம் கமிஷன்..."

"கஜானா என்று ஒன்று இருந்தது என்பதற்கு ஆதாரம் உண்டா?"

"இருந்திருக்க வேண்டும். ஆறு கமிஷன்கள் அது காணாமல் போனது பற்றி விசாரித்து அறிக்கைகள் சமர்ப்பித்திருக்கின்றன என்பதே இதற்குப் போதுமான ஆதாரம்."

"கமிஷன் அறிக்கைகளை வைத்துக் கொண்டு கஜானா இருந்தது என்பதை நம்ப வேண்டுமென்பதற்கு என்ன ஆதாரம்?"

"அவை காணாமல் போன கஜானாவைப் பற்றி விசாரிக்க, தலைவரால் நியமிக்கப்பட்டிருக்கின்றன என்பதால்."

"என் தலை சுற்றுகிறது என்பதற்கு ஆதாரமே தேவையில்லை. அது சுற்றுகிறது." என்றாள் வனிதா.














"எங்கள் நாட்டில் யார் என்ன சொன்னாலும் அதை அப்படியே அரசாங்கம் ஏற்றுக் கொள்வதில்லை. ஒரு கமிஷன் நியமித்து விசாரிப்பதுதான் மரபு."

வனிதா பயந்து கொண்டே கேட்டாள், "அப்படியானால் இப்பொழுது என் தலை சுற்றுகிறதா இல்லையா என்பதற்கு ஒரு கமிஷன்..."

"பயப்படாதே. இச் சட்டம் இந் நாட்டு மக்களுக்குத்தான், நமக்கில்லை..."

"நீங்கள் சொல்வது தவறு மேடம். நீங்களும் அடிப்படையில் பார்க்கப் போனால் இந்திர பிரஸ்தத்துக் குடிமக்கள் தாம். உங்கள் தலைவர் உங்கள் நாடு ஒரு சுதந்திரமான நாடு என்ற பிரமையை உங்களிடையே உண்டாக்கியிருக்கிறார். அரசியல் சௌகர்யங்களுக்காக எங்கள் தலைவர் இதைப் பற்றிக் கண்டுகொள்வதில்லை. சரி, இது வேறு பிரச்னை. நீங்கள் இப்பொழுது என்னுடன் புறப்பட்டு வர வேண்டும்..."

"எங்கே?" என்று ஆச்சர்யத்துடன் கேட்டாள் அபூர்வா.

"தலைவர் அழைத்து வரப் பணித்திருக்கிறார்."

"எதற்கு? எனக்குப் புரியவில்லை. நான் கஜானாவைத் தேடித் தருவதற்குத்தானே என் தலைவரால் அனுப்பப்பட்டிருக்கிறேன்?"

"இருக்கலாம்."

"என்ன இருக்கலாம்? எதற்காக இந்தக் கோப்புக்களை இங்கு கொண்டு வந்திருக்கிறீர்கள்?"

"புறப்படுங்கள்."

"இது உத்தரவா?"

"இருக்கலாம்."

"நான் வர மறுத்தால்?"

"எங்கள் தலைவரை நீங்கள் சந்திக்க விரும்பவில்லையா? உங்கள் நாட்டுத் தலைவரை உங்களால் சந்திக்க முடியாது. அப்படியிருக்கும் போது, எங்கள் தலைவரைச் சந்திக்கும் இந்த அதிர்ஷ்டம் வேண்டாமென்று மறுக்கின்றீர்களே, இது நியாயமா?"

"புறப்படுங்க, போகலாம்" என்றாள் வனிதா.

"மன்னிக்கவும். நீங்கள் அவரைச் சந்திக்க முடியாது. வெளியே காத்திருக்கலாம்..." என்றார் அவ்வதிகாரி.

"ஏன்?" என்றாள் வனிதா.

"எங்கள் தலைவர் இவருடன் சில முக்கியமான விஷயங்களை விவாதிக்க விரும்புகிறார். நாங்களே இருக்கப் போவதில்லை. இது அவர்கள் இருவருக்கு மட்டுமிடையே நிகழ இருக்கிற சந்திப்பு. போகலாமா?"

"சரி, நான் வரவில்லை" என்றாள் வனிதா.

"அது உங்கள் விருப்பம்."

தலைவர் வீடா, இல்லாவிட்டால் அது ஒரு ராணுவத் தளமா என்று சொல்ல முடியாத அளவுக்குப் பலத்த பாதுகாப்பு.

ஆறு இடங்களில் சர்வாங்க சோதனை. பெண் பாதுகாப்புப் படையினரும் இருந்தனர்.

"அவமானமாக இருக்கிறது" என்றாள் அபூர்வா.

"எங்கள் தலைவரை எங்களால் பார்க்க முடியும்," என்றார் அவர்.

ஒரு பெரிய 'ஹால்'. அங்கே நுழைந்ததும், ஓர் இளம் அதிகாரி, அவரிடம் காதில் ஏதோ கிசுகிசுத்தான்.

"உள்ளே வாருங்கள்" என்று அவர் அவளை இரண்டு கூடங்களைத் தாண்டி உள்ளே அழைத்துச் சென்றார்.

ஒரு சின்ன அறை. 'குளு குளு'வென்றிருந்தது. கூடை நாற்காலிகள். சின்ன மேஜை. பின்னால் சாய்ந்து கொள்ளும் நாற்காலி, சுவரில் ஒரு பூனைக் குட்டியின் வண்ண ஓவியம். அதன் கண் அசாதாரண ஒளியுடன் மின்னியது.

அவளை அது உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பது போலிருந்தது.

"இருங்கள்... நான் தலைவரிடம் சொல்லுகிறேன். அவர் உங்களைச் சந்திக்க வருவார்."

அவள் ஒரு கூடை நாற்காலியில் உட்கார்ந்தாள்.

'மியாவ்...'

அவள் திடுக்கிட்டாள். ஓவியப் பூனைதான் உயிர் பெற்றெழுந்து விட்டதோ? இல்லை. அது அவளை உற்றுப் பார்த்துக் கொண்டுதான் இருந்தது.

'மியாவ்...'

அவள் சுற்றுமுற்றும் பார்த்தாள்.

அவள் காலடியில் ஒரு பூனைக்குட்டி, அவள் கால்களைச் சோம்பலுடன் உரசிக்



"டீ.வி. பார்த்துக்கிட்டே எந்த வேலையையும் செய்யாதேன்னு சொன்னா கேட்டாத்தானே!"

"இப்ப என்ன ஆச்சு?"

"பலசரக்கு லிஸ்ட்டில 'ஜ"ஹுரன் ½ கிலோ'ன்னு எழுதியிருக்கே. கடைக்காரன் மண்டை காய்ஞ்சு போயிட்டான்."

— ஏ. சுந்தரம்

கொண்டு, வாஞ்சையுடன் பார்த்தது.

அவள் குனிந்து அதைத் தடவினாள்.

ஆளரவம்!

அவள் நிமிர்ந்தாள்.

தலைவர். அவர் முகமே அப்படித்தானா, அல்லது தோல் நிறத்தில் ஒரு முகமூடியா? முகத்தில் உயிர் இருப்பதாகவே தெரியவில்லை.

அவர் உட்கார்ந்தார்.

"எங்கள் தலைவர் அவருடைய, எங்கள் நாட்டு மக்களுடைய அன்பையும், நட்பையும், மரியாதையையும் உங்களுக்கும், உங்கள் நாட்டு மக்களுக்கும் தெரிவிக்கக் கூறினார்," என்று அபூர்வா எழுந்து ஒப்பித்தாள்.

பதிலில்லை.

அவளை உட்காரும்படி அவர் கையசைத்தார். அவள் உட்கார்ந்தாள்.

சிறிது நேரம் அமைதி.

"என்னை எதற்காக அழைத்தீர்கள்?" என்று கேட்டாள் அபூர்வா.

பதிலில்லை.

அவர் அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

பூனைக்குட்டி திடீரென்று தாவி அவர் மடியில் உட்கார்ந்தது.

'மியாவ்' என்றது அவளைப் பார்த்து. அவள் அவருக்கும் அவர் நாட்டுக்கும் வாழ்த்துத் தெரிவித்ததற்கு ஆமோதிப்பு பூனைக் குட்டியிடமிருந்து வருகின்றதா?

'மியாவ்' என்றது பூனை மறுபடியும்.

'பேசு' என்ற அர்த்தமா?

"என்னை எதற்காக அழைத்தீர்கள்?" என்றாள் அபூர்வா மீண்டும்.

அவர் அவளையே மௌனமாக உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

திடீரென்று அவளுக்கு ஒரு பிரமை. அவர் இதழ்கள் அசையவில்லை. ஆனால் அவர் மௌனம் பேசுகிறது, அவளுக்குத் தெரிந்த வேறொரு மொழியில்.

'கஜானாவைப் பற்றி ஏதாவது தெரிந்ததா?'

"என்னை எதற்காக அழைத்தீர்கள்? இது பற்றிக் கேட்கத்தானா?"

'மியாவ்' அவர் பூனைக் குட்டியைப் பரிவுடன் தடவிக் கொடுத்தார்.

அவளுக்கு எரிச்சலாக வந்தது.

மறுபடியும் அவருடைய மௌனம் பேசிற்று, அவள் பிறந்த நாட்டு மொழியில்.

'கஜானாவைப் பற்றி ஏதாவது தெரிந்ததா?' அவர் அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

அவள் கோபத்தில் கத்தினாள். "தெரிந்தது. மூட்டை மூட்டையாகக் கோப்புகளை அடுக்கி வைத்திருக்கிறீர்களே, கமிஷன் என்ற பேரில், அந்த 'ஸ்ட்ராங் ரூமி'ல் தேடிப் பாருங்கள். கோப்புக்களின் ராட்சக் குவியலில் கஜானா மறைந்து கிடக்கலாம்."

அவர் டெலிஃபோன் செய்தார். ஆனால் பேசினதாகத் தெரியவில்லை.

இந்த மௌனம் என்ன பாஷை?

அவளுக்குப் புரியாத மொழி.

"என்னை எதற்காக அழைத்தீர்கள்? நீங்கள் இவ்வாறு செய்வது எங்கள் தலைவரை அவமதிப்பது போலாகும்."

'மியாவ்.'

"அந்தப் பூனைக் குட்டியைத் தூக்கி எறியுங்கள்."

'ஏன் இப்படிக் கத்துகிறாய், என்ன ஆகிவிட்டது உனக்கு?'

அவர் மௌனம் பேசுகின்றதா? அவளுக்குத் தெரிந்த மொழியாக இருக்கின்றதே! அப்பொழுது அவளை அங்கு அழைத்து வந்தவர் வேகமாக உள்ளே வந்தார். அவருக்கு மூச்சிரைத்தது.

"எஸ், சார்... கஜானா கிடைத்து விட்டது. அலுவலகத்து 'ஸ்ட்ராங் ரூமி'ல் கமிஷன் கோப்புகளால் மூடப்பட்டு மறைந்து கிடந்தது. நீங்கள் டெலிஃபோனில் சொன்னதும், தேடினோம், கிடைத்து விட்டது. தாங்க்யூ— மேடம்— நீங்கள் ஒரு மேதைதான், சந்தேகமில்லை" என்றார் அவர்.

அபூர்வாவுக்கு ஒன்றும் புரியவில்லை. தலைவர் புன்னகை செய்தார். அது எந்த மொழியிலென்றும் அவளுக்கு விளங்கவில்லை.

'மியாவ்'

இப்பொழுது அப் பூனைக் குட்டி, அவள் காலடியிலே கிடந்தது.

(தொடரும்)




அவள்தான்!

யாரைப் பற்றிய நினைவை என் உள்ளத்திலிருந்தே நீக்கி விடவும் அழித்து விடவும், எந்த முகத்தை மறந்து விடவும் இத்தனை வருஷங்களாகச் சிரமப்பட்டுக் கொண்டு வருகிறேனோ, அவளேதான்!

எல்லாமே பழைய கதை. தேய்ந்து போன கனவு.

ஒரு மாத லீவில் சொந்த ஊரான தென்காசிக்குப் போய்க் கொண்டிருக்கிறேன். திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் இருபது நிமிஷங்கள் போல விருதுநகர் ஜங்ஷனில் நிற்கும் என்பது என் ஞாபகம். ஒரு கப் காப்பியை உள்ளே தள்ளி விட்டு வரலாம் என்று இறங்கி ஸ்டால் பக்கமாக நடந்தேன். காசைத் தந்து விட்டுத் திரும்பும் போதுதான் எதிர்ப்பக்கம் பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்த திருநெல்வேலி போகும் வண்டியின் பக்கம் என் பார்வை சென்றது.

ஆனால் - ஏன் பார்த்தோம் என்று ஆகி விட்டது! என் கண்களையே என்னால் நம்ப முடியவில்லை.

நல்லவேளை! அவள் பார்வையில் நான் படவில்லை. அந்த இடத்தை விட்டு என் வண்டிக்குப் போய் விடவேண்டுமென உடல் பரபரத்தது. நெஞ்சும் கால்களும் ஏனோ நடுங்கின. நெருப்புக் கோழியைப் போல கையிலிருந்த பத்திரிகையால் முகத்தை மறைத்துக் கொண்டேன். மெதுவாக நடந்தேன்.

அவள் எப்படி, ஏன் இங்கு வந்தாள்? எங்கே போகிறாள்? எதிர்பாராமல் இப்படி ஒரு சந்திப்பா?

நான்கு வருஷங்களுக்கு முன்பு - அன்று

அன்று -

அவளை - சகுந்தலாதான் பெயர் - அவளைப் 'பெண் பார்த்தது போலவேதான் இன்றும் இருக்கிறாள். இன்னமும் கூடக் கவர்ச்சியும் அழகும் கொஞ்சம் அதிகமாயிருப்பது போலத்தான் தோன்றுகிறது.

ஒரு காலத்தில் அவளை மணம் செய்து கொள்ள இருந்தவன் நான். மனத்தில் கணக்கில்லாத இன்ப போதையை ஏற்றியிருந்தவள்தான். ஆனால் -இப்போது எட்டாத பழமாக ஆகி விட்டாள்.

இன்னமும் அவள் - ரோஜாப் பூவைப் போலப் பார்வையைத் தடுத்து நிறுத்தும் ஒரு தனி மோகனத்துடன்தான் விளங்குகிறாள். ஹூம்! எப்படியோ! என்னிடமிருந்து பலகாத தூரம் தள்ளிப் போய் விட்டாள். இல்லை - தப்பு - நான்தான் ஒதுங்கிப் போய் எட்டாக் கையில் நின்று விட்டேன். அவளைக் குறைகூறுவதில் நியாயமே இல்லை. எல்லாமே என்னால்தான்!

ஆவலைக் கட்டுப்படுத்த முடியாமல் இன்னொரு முறை பார்த்தேன். எங்கோ என் மனத்தில் ஆழப் புதைந்து போன என் நினைவுகளைக் கிளப்பி விட்டு அலைக்கழிக்கிறாளே? தான் மட்டும் நிம்மதியாக இப்போது இருக்கிறாளே? தாபம் என் மனதை அரித்தது.





பார்க்க' என் சகோதரியுடன் போய் வந்து ஒரு வாரமாகியிருக்கும். சம்மதத்தைக் கூட, ஜாடையாக, அன்றே அவள் வீட்டாருக்குப் புரியவைத்து விட்டுத்தான் கிளம்பினோம். பரபரப்பாக அவள் வீட்டில் இயங்குவதாகவும், கல்யாணத்துக்கு நான் குறிக்க ஏற்பாடுகள் தீவிரமாக அங்கே நடப்பதாகவும் என் மைத்துனர் கடிதம் எழுதியிருந்தார். அப்படியே ஒருவித இன்ப லாகிரியில்தான் நான் மிதந்து கொண்டிருந்தேன்.

அன்று மாலை வெளியே கிளம்பலாம் என்று வாசலுக்கு வந்து கதவைப் பூட்டினேன். திரும்பிய போது, திடீரென்று, ஒரு ஆள். முன்பின் பார்த்திராத, பரிச்சயமில்லாத ஒரு ஆசாமி! தயங்குபவர் போல நின்று என்னையே பார்த்தார். புரியவில்லை.

''உங்களைப் பார்க்கத்தான் வந்தேன், ஆனால்...''

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. யார் இது? பார்த்தால் யாசகத்துக்கு வந்திருப்பவனைப் போலத் தெரியவில்லை. நல்ல உயரம். கம்பீரமான களை பொருந்திய முகம்!

''என்னையா? என்ன விஷயம்? நான் வெளியே கிளம்பி...''

''புரிகிறது. அதனால்தான் இங்கேயே நிறுத்தினேன். கதவை வேறு பூட்டி விட்டீர்கள்!''

''எதுவானாலும் பரவாயில்லை. சொல்லுங்கள்'' என்றேன்.

**இன்னமும் அவன் - ரோஜாப் பூவைப் போலப் பார்வையைத் தடுத்து நிறுத்தும் ஒரு தனி மோகனத்துடன்தான் விளங்குகிறான்.**

அந்த ஆசாமியின் முகம் கெஞ்சிற்று. உள்ளே போவோம் என்று கை ஜாடை செய்தது. அரை மனத்துடன்தான் பூட்டைத் திறந்தேன். உள்ளே நான் நுழைந்ததும் பின்னாலேயே ஆசாமி நிழல் போல வந்தான். நாற்காலியைக் காட்டினேன். உட்கார்ந்தான். சுற்றுமுற்றும் பார்த்தான்.

''சொல்ல வந்ததை இங்கே தாராளமாகப் பேசலாம்'' என்றேன் ஆரம்பித்து வைப்பது போல.

''ஸார்... வந்து... சகுந்தலாவை...''

சட்டென நிமிர்ந்து ஆளை நேரே பார்த்தேன்.

''...நீங்கள் கல்யாணம் செய்து கொள்வதாக நிச்சயமாகி ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. எனக்கு எப்படித் தெரியும் என்று நீங்கள்...''

எனக்கு அதிர்ச்சி. யார் இந்த ஆசாமி?

''உங்கள் சந்தேகம் எனக்குப் புரிகிறது. எனக்கு எல்லாமே தெரியும். தயவுசெய்து பொறுமையாக....''

உடல் முழுவதும் 'ஜில்'லென்று சமுத்திர அலை போல் ரத்தம் பாயும் ஒரு உணர்வு எனக்கு.

சுதாரித்துக் கொண்டேன். குறுக்கே எதும் பேசாமல் காது கொடுத்துக் கேட்டு விடுவது என்கிற முடிவுக்கு வந்து விட்டேன். எதானா

# ரஸவாதி

தி. ஜானகிராமனைத் தமது மானசீக குருவாகக் கொண்டு எழுதத் தொடங்கியவர், ரஸவாதி (ஆர். ஸ்ரீநிவாசன்). இவரின் 'ஆதாரசுருதி' 57-ம் ஆண்டு கலைமகள் நடத்திய நாராயணசுவாமி ஐயர் நாவல் போட்டியில் 1000 ரூபாய் பரிசு பெற்றதோடு, இவரது மிகச் சிறந்த படைப்பு என்கிற பாராட்டுதலையும் பெற்றது. 49-ம் ஆண்டிலிருந்தே எழுதத் தொடங்கிய ரஸவாதி அண்மையில் காலமானார். அவரை நினைவுகூரும் வகையில் 51-ம் ஆண்டு கல்கியில் அவரெழுதிய 'ரோஜாமுள்' சிறுகதையை இங்கே வெளியிடுகிறோம்.

- ஆசிரியர்.



லும் முழுக்கக் கேட்டு விடுவது நல்லது தானே?

"தாங்க்ஸ் ஸார்! - இந்த சகுந்தலாவுக்கு ரமணி என்று - அவன் எனக்கும் நண்பன் தான் ஈடுபாடு உண்டு. காதல் என்றும் சொல்லலாம். இருவரும் மணம் செய்து கொள்வதாகத் தீர்மானம் செய்திருக்கிறார்கள்!"

அடுத்த ஷாக் எனக்கு! பேச்சா அது? நெருப்பு ஜ்வாலை போலல்லவா ஒவ்வொரு வார்த்தையும் வருகிறது? அதன் தகிப்பை என் உடல் அணுஅணுவாக உணர்ந்தது.

"ஸார்! முன்னதாக நான் சகுந்தலாவின் உறவுக்காரன். அதைச் சொல்லி விடுகிறேன். உங்கள் சந்தேகம் சற்றுக் குறையலாமல்லவா?"

என் அசாதாரண மௌனம் அவனுக்கு என்ன உணர்த்தியதோ, எதைப் புரிய வைத்ததோ!

"அவள் பெற்றோர்களுக்கும் இது ஜாடைமாடையாகத் தெரியும். ஆனால் இதில் அவர்களுக்கு உடன்பாடு இல்லை. காரணம் - அந்த இரண்டு குடும்பப் பெரியவர்களுக்கும் எப்போதோ எதனாலோ சற்று மனஸ்தாபம். சிநேகமும் பழக்கமும் அறவே நின்று விட்டது. கடைசி சமயத்தில் எங்கே ரமணி வந்து காரியத்தைக் கெடுத்து விடுவானோ என்று இவர்களுக்குப் பயம். விவகாரத்தைச் சட்டுப் புட்டென்று முடித்து புருஷன் வீட்டுக்கு அவளை அனுப்பி விடத் துடியாக நிற்கிறார்கள்!"

என் மௌனம் கலைந்தது. இவன் சொல்வதெல்லாம் உண்மையா?

"அப்படியா! பின் 'பெண் பார்க்க' என்னை வரவழைத்தது அவளுக்கு முன்னதாகத் தெரியாதா? அப்போது ஏன் அவள்...?"

"அதில்தான் ஸார் அவள் சாமர்த்தியம் முழுவதுமே! வெறும் நடிப்பு. பெற்றவர்கள் மனம் கோணக் கூடாதே என்கிற ஆதங்கம். அதே சமயம் தன் எண்ணமும் நிறைவேற வேண்டும். இந்த நினைப்புத்தான் அவளுக்கு. உருகிப் போனாள். தன் நிலையை என்னிடம் மட்டும் சொன்னாள். பெண் பார்க்கும் படலத்துக்கு ஒப்புக் கொள்வது போல நாடகமாடி சமாளித்து விடலாம் என்று நான்தான் தைரியம் சொன்னேன். பிறகு எப்படியாவது சமாளித்து விடலாம் என்பது என் யோசனை!"

"என்ன ஸார்! இதெல்லாம் ஒரு விளையாட்டா உங்களுக்கெல்லாம்?" என் பேச்சின் உஷ்ணம் அவனைப் பலமாகத் தாக்கியிருக்க வேண்டும்!

"ஸார்! ஸார்! தயவுசெய்து கோபப்படாதீர்கள். தன் குடும்பத்துக்கு அனாவசியமாக ஒரு கெட்ட பெயர் வருவதை அவள் விரும்பவில்லை. கூடிய சீக்கிரம் தன் பெற்றோரிடம் மன்றாடி, கெஞ்சி, அழுது, சிரித்து ஏதாவது செய்து தன் விருப்பத்துக்கு இணங்க வைத்து விடலாம் என்று திடமான நம்பிக்கை, ஸார் அவளுக்கு! ஆனால்...."

"இப்போது என்னை மாப்பிள்ளையாக்கிக் கொள்ள வீட்டில் தீவிரமாக ஏற்பாடுகள் நடந்து வருவதால் பயந்து விட்டாளாக்கும்?"

"அதுதான் ஸார் உண்மை. ரமணியும் ஊரில் இல்லை. கல்கத்தாவிலிருந்து எனக்கு தந்தி கொடுத்திருக்கிறான். எப்படியாவது நல்லதனமாக உங்களிடம் பேசி இதைத் தடுத்து நிறுத்தும்படி. அதனால்தான் உங்களிடம் இப்போது ஓடி வந்திருக்கிறேன்." அந்த ஆள் தந்தியையும் என்னிடம் காட்டினான்.

ஆத்திரம், ஏமாற்றம், வெறுப்பு எல்லாமாக என் மனத்தில் நிரம்பி வழிந்தன.

"இதை நிரூபிக்க உங்களால் முடியுமா?"

"ஓ! சகுந்தலாவை விட்டே சொல்லச் சொல்கிறேன் ஸார்! போதுமா?"

மீண்டுமொரு அதிர்ச்சி எனக்கு. அவன் அடங்கி விடுவான் என நான் நினைத்தேன். மாறாக என்னை மடக்கி விட்டான்!

"தயைசெய்து திருச்சிக்கு ஒரு நடை வாருங்கள். நீங்களிருவரும் சந்தித்து இரண்டு நிமிஷம் பேசிக் கொள்ளும் சந்தர்ப்பம் ஒன்றை எப்பாடுபட்டாவது நான் ஏற்பாடு

செய்து தருகிறேன்!"

அது விபரீதமாக, செய்யத்தகாத ஒரு காரியமாக எனக்குப் பட்டது.

"ஏன் அவளது பெற்றோர்களையே நான் கேட்டால் என்ன?"

அவன் திடுக்கிட்டுப் போனான்.

"ஸார்! கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். அப்படி ஏதேனும் அவசரப்பட்டுச் செய்து காரியத்தைக் கெடுத்து விடாதீர்கள்!"

"ஏன்?"

"கவரிமான் போல, ஸார் அவள்! பெற்றவர்கள் எதிரில் கௌரவக் குறைவாகப் பேசவோ நடக்கவோ மாட்டாள். அவளை எனக்கு நன்றாகத் தெரியும்!"

கூண்டுப் புலி போல அறையில் குறுக்கும் நெடுக்குமாக நிம்மதியின்றி நான் நடந்தேன்.

"ஒன்றுமறியாத, நல்லவரான, நீங்கள் இந்தப் பாபத்தைக் கட்டிக் கொள்ள வேண்டுமா? அதைத் தடுத்து நிறுத்தத்தான் அவசரமாக வந்திருக்கிறேன். ப்ளீஸ்! புரிந்து கொள்ளுங்கள் ஸார்!"

ஆசாமி போய் விட்டான். அவன் வேலை முடிந்தது! பலிக்கும் என்கிற முழுநம்பிக்கையுடன் அவன் போவது எனக்கு நன்றாகவே புரிந்தது.

அவனை நிறுத்தி வைத்து, இன்னமும் ஏதேதோ கேட்க வேண்டுமென்று நான் நினைத்தேனே தவிர, செயலில் காட்ட முடியாமல் போய் விட்டது. எதுவோ என்னைத் தடுத்து நிறுத்தி விட்டது.

அவன் சொன்னது உண்மையாக இருக்குமோ? அப்படியானால் அந்த ரமணிக்கும் அவளுக்கும் நிஜமாகவே அத்தனை ஈடுபாடு இருக்குமானால்?

'நீ ஒதுங்கிக் கொள்வதுதான் முறை. உண்மையான பிரியத்துக்குக் குறுக்கே சுவர் போல நீ நிற்பதும், செயல்படுவதும் நியாயமல்ல. அதனால் உனக்கும் நிரந்தரமான நிம்மதியும், அமைதியான குடும்ப வாழ்வும் பொய்யாகி விடும்!'

உள்ளே என் மனம் இரைந்து பேசுகிறது! என் காதுகளிலேயே அது விழுந்தது. இது வெறும் வதந்தியா அல்லது உண்மையா? அதைத் தெரிந்து கொண்டு விட வேண்டுமென்ற துடிப்பு மட்டும் உறுத்திக் கொண்டே இருந்தது. ஆம்! நிச்சயமாக அதைச் செய்தாக வேண்டும்.

**ம**றுநாள் காலை. திடீரென நான் வந்து இறங்கியதும் திருச்சியில் அக்கா வீட்டில் ஆச்சரியப்பட்டுப் போனார்கள். மெதுவாக நான் வந்ததன் காரணத்தைச் சொன்ன போது, அவர்கள் கலவரப்பட்டுத்தான் போனார்கள்.

மூன்று பேருமாக வெகு நேரம் பேசினோம். பிறகு அக்காள் புருஷன் ஒரு தீர்மானத்துக்கு வந்தார். அதன்படி நான் மட்டும் அன்று மாலை பொன்மலைக்குப் போக வேண்டும். பெற்றோர்களின் சம்மதத்துடன் அந்தப் பெண்ணிடம் தனிமையில் இரண்டு வார்த்தைகள் பேச வேண்டும். கேள்விப்பட்டது உண்மையா என்பதை அவளிடமிருந்தே ஊர்ஜிதம் செய்து கொள்ள வேண்டும். அப்படி இருந்தால் ஓசைப்படாமல் திரும்பி வந்து விட வேண்டும். அவள் தகப்பனாருக்கு அக்காள் புருஷன் பின்னர் தக்கபடி பதில் எழுதி விடுவார். இதுதான் திட்டம்!

பூசணிக்காயைப் போட்டு உடைப்பது போல இல்லாமல் கண்ணியமாக, காதும் காதும் வைத்தாற்போல விஷயத்தை முடித்து விடுவதில் ஒரு ரசாபாசமும், அவமரியாதையும் இல்லையல்லவா?



"எங்கப்பா கதை எழுதறமாதிரியே உயிலையும் எழுதிட்டார்!"

"எப்படி...?"

"உயிலின் இறுதியில் 'இதில் கண்ட சொத்துக்கள் எல்லாம் கற்பனையே'ன்னு எழுதிட்டார்...!"

— சோம. முத்துக் குமார்



"போலீஸ்காரரை வாழ்த்தச் சொன்னா எப்படி வாழ்த்துவார்?"

"தொந்தியும், தொப்பையுமா வாழணும்னு வாழ்த்துவாரு!"

— எஸ். அனந்த குமார்



"ஹலோ! கரண்ட் ஆபீஸா! ரெண்டு நாளா, எங்க வீட்ல டியூப்லைட்டெல்லாம் எரியுது. என்னன்னு செக் பண்ணுங்க!"

— ஏ. சுந்தரம்



# ராஜபாண்டி

சரத்குமாரின் இந்த மாத கோட்டா ராஜ பாண்டி. கதைக்குள்ளே கதைக்குள்ளே கதை. கடைசியாய் வில்லனை மக்கள் மன்றத்தின் நடுவே கொன்றபின், நாம் நமது பொறுமையின் பயனை நொந்தபடி வெளியே வருகிறோம். பார்முலாவிலிருந்து இம்மியும் பிசகவில்லை.

சரத்குமார் : வீரம் ஓ.கே; நடிப்பு?

சுகன்யா : இனி கேரக்டர் கேட்டுச் செய்வது காலத்தின் கட்டாயம். உப்பரிகையில் உட்கார்ந்து பார்க்கும் காலம் எல்லாம் மலையேறிப் போச்சு மேடம்.

கஸ்தூரி : தெலுங்கில் லவுட்டிக் கொண்டு போகப் போகிறார்கள். அதனால் நாம் மறந்து விடுவோம்.

தேவா : இனிமை. இந்தக் கருணை எல்லாப் படங்களுக்கும் இருப்பது நல்லது.

ஒளிப்பதிவு : சிரத்தை தேவை.

கலை : 'அத்திப் பழம் சிவப்பா' வில் தெரிகிறீர்கள் சார்.

எடிட்டிங் : ஜீவநாடி. கதைக்குள்ளே கதைக்குள்ளே கதையைப் புரியவைக்க ரொம்பக் கஷ்டப்பட்டிருக்கிறார்.

டைரக்ஷன் : வித்தியாசமாய் ஏதும் செய்ய ஆசையே வராதா?

- துளசி

அவர்கள் வீட்டை அடைந்த போது இருட்டி விட்டது. வாசலிலேயே நின்றிருந்த அந்தப் பெண் என்னைப் பார்த்ததும் திடுக்கிட்டது போல எனக்குப் பட்டது. அடுத்த கணம் துள்ளி உள்ளே ஓடி விட்டாள்.

படி ஏறி உள்ளே போனேன். பெரியவரும் அவர் மனைவியும் வராந்தாவுக்கே வந்து விட்டார்கள். அவர்கள் முகத்தில் ஒரு திகைப்பு. ஆச்சரியம்!

"வாருங்கள்! உள்ளே வாருங்கள்!"

அவர் பேச்சே திணறித்தான் வந்தது போல எனக்குத் தோன்றியது.

"ஊரிலே எல்லோரும் சௌக்கியந்தானே?"

"ம்!"

ஓரிரண்டு நிமிஷங்கள் என்ன பேசுவது என்று புரியாமல் மூவருமே திகைத்தோம். விஷயத்தை எப்படியாவது ஆரம்பித்து விட வேண்டும் என்கிற துடிப்பு எனக்கு.

"என்ன சாப்பிடுகிறீர்கள். காப்பி."

தலையை அசைத்து விட்டு கையமர்த்தினேன். உட்கார்ந்தேன். எதிரே இருந்த நாற்காலியில் அவரும் அமர்ந்தார்.

"நான் வந்த விஷயம்..."

"சொல்லுங்கள்."

மென்று விழுங்கிக் கொண்டு தான் என்னால் பேச முடிந்தது.

"ஒரு சின்ன வேண்டுகோள்."

"என்ன?"

"உங்கள் பெண்ணுடன் தனியாக ஒரு ஐந்து நிமிஷம் பேச வேண்டும். அனுமதி கொடுங்கள்!"

எப்படி தைரியமாகப் பேச முடிந்தது என்பது எனக்கே வியப்புத்தான்.

பெரியவர் முகம் கணநேரம் என்னவோ போல மாறிற்று. சுதாரித்துக் கொண்டார்.

"என்ன கேட்க வேண்டுமானாலும் என்னிடம் சொல்லுங்கள். நான் உள்ளே போய் அவளைக் கேட்டு வந்து பதில் சொல்கிறேன்." அதற்குள் அவருக்கு வியர்த்து விட்டது.

கதவிடுக்கு வழியே இரண்டு கண்கள் என்னைத் துளைப்பதை என் உடல் உணர்த்திற்று.

"சும்மாதான் பேசலாமென்று..."

அந்த அம்மாள் குரல் இடைமறித்தது தயக்கத்துடன்.

"நம்ப குடும்பத்திலே எல்லாம்... வந்து... இப்படியெல்லாம் பேச விடுவது..."

தன்னைப் பார்த்துப் பேசிய மனைவிக்குப் பதில் சொல்வது போலப் பெரியவர் பேசினார்.

"ஆமாம்... இது புது வழக்கமாகத்தான் இருக்கிறது. அவர் கேட்பது நியாயமாகத் தோன்றினாலும் சம்பிரதாயத்தை மீறி எப்படி இதை அனுமதிப்பது?"

சம்பிரதாயம், சட்டம், பழக்கவழக்கங்கள்! நிலைமையின் முக்கியத்துவம் தெரியாமல், பயங்கரம் புரியாமல் இப்படிப் பத்தாம்பசலிகள் போலப் பேசுகிறார்களே? காலத்துக்கு ஒத்தபடி மாறவே மாட்டார்களோ இவர்களெல்லாம்? என்ன சோதனை. அந்தப் பெண்? இந்தக் காலத்தவள். படித்தவள். அவளுக்குமா தைரியமில்லை, உண்மையைப் பெற்றோரிடம் உடைத்துப் பேச?

கவரிமானாம்! மானத்துக்குப் பயப்படுகிறவளாம். அன்று அவன் சொன்னானே?

சே! என்ன குடும்பமோ என்ன மனிதர்களோ!

எனக்கு விரக்திதான் ஏற்பட்டது.

"மன்னிக்க வேண்டும். அவளிடமே தனியாகப் பேச வேண்டுமென்றுதான் வந்தேன். உங்களுக்கு அதில் சம்மதமில்லை என்று புரிகிறது... சரி! நான் வருகிறேன்!"

எழுந்து வாசற்படியைத் தாண்டி விட்டேன். திரும்பி ஒருமுறை பார்த்த போது சிலையாய் பெற்றோர்கள் நிற்பது தெரிந்தது. பக்கத்தறை ஜன்னல் வழியே அந்த முகம்! அந்தக் கண்கள் என்னைப் பார்த்த போது... அதில் தெரிந்தது நன்றியா, சந்தோஷமா அல்லது வெறும் சாதாரணப் பார்வைதானா? எனக்கு ஒன்றும் புரிந்து கொள்ள முடியவில்லை! பிரமை பிடித்தவன் போல தெருவில் நடந்தேன்.

முடிவாக - அந்தக் கல்யாணம் நின்றுதான் போய் விட்டது. அது முதல் என் நிம்மதியும் பறிபோய் விட்டது. தியாகம் செய்ததாக - இன்னொருத்தனுக்கு விட்டுக் கொடுத்ததாக - ஒரு பிரமை மனத்தில். ஆனால் தியாகிக்குக் கிடைக்கக்கூடிய அமைதியும் ஆனந்தமும் எனக்குக் கிட்டவில்லை!

அவளைப் பற்றிய சிந்தனைகள்தான் இரவும் பகலும். அவற்றை அறவே அழித்து விடும் பிடிவாத நோக்கத்துடன், யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல், ஊரை விட்டே கிளம்பி விட்டேன். மூன்று மாதம் போல வடக்கே, தெற்கே எல்லா இடமும் சுற்றினேன். சலித்துப் போய் வடக்கேயே ஒரு ஊரில் வேலை ஒன்றைத் தேடிப் பிடித்துக் கொண்டு இருந்து விட்டேன். பிறகுதான் அக்காவுக்கே தகவல் கொடுத்தேன்.

நான்கு வருஷங்கள் கழித்து ஊர்ப்பக்கம் இப்போது வந்திருக்கிறேன், முதன் முறையாக. கன்யாகுமரி வரை போய் வர உத்தேசம்.

பொன்மலை எங்கே விருதுநகர் எங்கே! அவள் எப்படி திடீரென இப்போது முளைத்து எதிர்வண்டியில் இருக்கிறாள்? எங்கு போகிறாள்?

ரயில் 'கூ'வெனக் கத்தியதில் என் சிந்தனை கலைந்தது. கல் விழுந்த காக்கைக் கூட்டம் போல எண்ணங்கள் சிதறின. இரு வண்டிகளும் ஏக காலத்தில் கிளம்பின.

ஸ்டேஷனிலிருந்து 'ஔட்டர்' ஸிக்னல் கைகாட்டி வரை இரண்டு பாதைகளும் சேர்ந்தே போகும் என்பது நினைவுக்கு வந்தது. இரு ரயில்களும் போட்டி போட்டுக் கொண்டு வேகத்தை அதிகப்படுத்தின. இங்கிருந்து பார்ப்பதற்கு அந்த வண்டி அசையாமல் எதிரே நிற்பது போன்ற ஒரு தோற்றம்!

அவளை இன்னொரு முறை பார்ப்போமா!

என் ஆதங்கத்தை உணர்ந்தது போல என் வண்டி தன் வேகத்தை அதிகரித்தது. ஜன்னல் வழியே, ஆவலைக் கட்டுப்படுத்தியபடி, நான் பார்த்துக் கொண்டிருந்தேன். எதிரே மெதுவாக, ஒவ்வொரு பெட்டியாக அந்த ரயில் பின்னடைந்து கொண்டிருந்தது. குழந்தைகளைப் போல ஜனங்கள் எதிர் வண்டியிலிருந்தவர்களுக்குக் கையசைத்து விடைகொடுத்துக் கொண்டிருந்தார்கள். எத்தனை குதூகலம் இவர்களுக்கு! எது ஜெயிக்கும் என்றும் ஆவல் வேறு!

அவள் இருக்கும் பெட்டி நெருங்கி விட்டது. அவளும் ஜன்னல் வழியே மலர்ந்த முகத்துடன் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள் என் ரயிலை.

இதோ -நேருக்கு நேர் இருவரும்!

வெவ்வேறு ரயிலாக இருந்தால் மட்டும் என்ன?

கண்ணைக் கொட்டாமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன். அவளும் பார்த்து விட்டாள். புரிந்து கொண்டாள் என்பதை அந்த வினாடி நேரத் திகைப்பு காட்டிக் கொடுத்தது. உடனேயே முகத்தைத் திருப்பிக் கொண்டு விட்டாள்.

அவள் மடியில் அதே ஜாடையில் ஒரு குழந்தை. முதுகுப் பக்கமாக அணைத்தாற் போல - அவள் கணவனா?

இவன்தான் அந்த ரமணியா? அல்லது வேறு ஆளா?

முன்பின் பார்த்திருந்தால் அல்லவா என் சந்தேகம் தெளியப் போகிறது!

என் வண்டி முன்னேறி, திருப்பத்தில் வளைந்து, வேறு திசையில் செல்லத் தொடங்கிற்று.

என் குழப்பம் அதிகமானதுதான் மிச்சம். இவ்வளவு வருஷங்களுக்குப் பிறகு இப்படி ஒரு சந்திப்பா?

குழம்பிய மனத்துடன் தலையை உள்ளுக் கிழுத்துக் கொண்டேன்.

அவள் பக்கத்தில் இருந்தது... அவள் கணவன்தான். சந்தேகமே இல்லை... ஆனால் அது ரமணி என்கிற... யாருக்காக என் உரிமையைத் தியாகம் செய்து விட்டுக் கொடுத்ததாக நான் நினைத்துக் கொண்டு, அதன் விளைவாக நிம்மதியின்றி பல வருஷங்கள் தவித்து, திணறி, ஊர் ஊராக அலைந்து...!

ஒரு வினாடி புதுக்குழப்பம்.

புண்ணைக் கீறி ஆற்றி விடுவது போல செய்யத் தவறிய - இல்லை இல்லை அப்படிச் செய்ய முடியாமல் ஏமாற்றத்துடன் திரும்பி வந்து விட்டது நான்தான். அப்போது தைரியமில்லை. இப்போது மட்டும் அது ரமணியா, ரங்கநாதனா, கப்பனா என்று என்ன அர்த்தமில்லாத சிந்தனை? சே!

கைக்கெட்டியது வாய்க் கெட்டாமல் ஆகிவிடும்படி செய்த இந்த மூடத்தனமான சம்பிரதாயங்கள், சடங்குகள்... தப்பு... நான் அன்று சரியான முறையில் நடந்து கொண்டிருக்க வேண்டும். அன்று முள்ளுக்குப் பயந்து ரோஜாவை கோட்டை விட்டாயிற்று! பின் இன்று மட்டும் ஏன் இந்த திடீர் சந்தேகம், குழப்பம்? சே!

குதிரை ஓடிப் போன பிறகு லாயத்தை இறுகச் சார்த்தி மூடினானாம் யாரோ ஒருவன்! அந்தக் கதையைப் போலத்தான் ஆகி விட்டது இதுவும்.

ஹூம்! அவள் இப்போது இன்னொருத்தனின் மனைவி.

ஆம். விஷயம் தெரிந்துதான் இவளைக் கல்யாணம் செய்து கொண்டிருப்பானோ? முள் இருக்கும் என்பதை லட்சியம் செய்யாமல் துணிச்சலுடன் அந்த ரோஜாவைப் பறித்துத் தனதாக்கிக் கொண்டிருப்பானோ? ரொம்ப லாகவமாகப் பறித்து...

அல்லது... ஒன்றுமே கேள்விப்படாமல் வெகுளியாக, சாதாரணமாக வந்து, மணையிலமர்ந்து, மாங்கல்யத்தைக் கட்டி...

உடலைச் சிலிர்த்து விட்டுக் கொண்டேன். என்ன அசட்டுத்தனமான எண்ணங்கள்? எப்படி இருந்தால்தான் என்ன? அவன் கொடுத்து வைத்தவன்!


ாதே - பேசாதே


பா.ஜ.க


அரசியல் ஒதுக்கீடு 0%

இந்த மாடர்ன் யுகத்துல, நவராத்திரிக்கு யாருமே சுண்டல் பண்றதில்லை....


ாங்கிரஸ்


ம.தி.மு.க

போயிட்டுப் போவுது, நாமே திண்டலாவது பண்ணுவோமே!




Coca Cola Coke
வெளிநாட்டுத் தொழில் வியாபாரப் பொருட்கள்

ராமசாமி பற்றிய இனிய எண்ணங்களில் தன்னை மறந்து காரை அவரது வீட்டைத் தாண்டி ஓட்டி விட்ட அஞ்சனா வெட்கமடைந்தாள். அவரது வீட்டைத் தாண்டி மூன்றாவது வீட்டு வாசலில் கார் நின்றதும் அவ்வீட்டு வாசலில் நின்றிருந்த அம்மாள் விழிகளை விரித்துப் பார்த்தாள். அஞ்சனாவுக்குத் தவிப்பாகப் போயிற்று.

"ஐ'ஆம் சாரி. வண்டியை ரிவர்ஸ்ல எடுக்கட்டுமா?"

"வேணாம். நான் இறங்கி நடந்து போய்க்கிறேன்" என்றவாறு கார்க் கதவின் கைப்பிடியைத் தொடப் போன ராமசாமியிடம், "வேணாம். ஒரு நிமிஷம்... ஒண்ணு பண்றேளா? இன்னிக்கு எங்கூட எங்காத்துக்கு வாங்களேன். எங்கப்பா உங்களைப் பார்க்கணும், பார்க்கணும்னு சொல்லிண்டே இருக்கார். நானும் இதோ அதோன்னுண்டிருக்கேன். எப்பவும் கடைசியா நீங்க இறங்கறதில்லே. இன்னிக்குத் தோதா அமைஞ்சிருக்கு. என்ன சொல்றேன்? ஆத்துல சொல்லிட்டுத்தான் வரணும்னா வண்டியை ரிவர்ஸ்ல எடுக்கறேன்..." என்றாள் அஞ்சனா.

'ஆத்துல சொல்லிட்டுத்தான் வரணும்னா...' என்னும் சொற்கள் தம்மைக் கேலி செய்தாற்போல் தோன்றியதில், ராமசாமி, "அதெல்லாம் ஒண்ணுமில்லே. இப்பவே வரேன்," என்று கூற, கார் விரைவு எடுத்துப் பறந்தது.



காரின் பின்புறத்தையே வெறித்துப் பார்த்தவாறு சில விநாடிகள் நின்ற அவ்வீட்டுக்கார அம்மாள் செல்லம்மா, 'கலி முத்திப் போச்சு' என்று சொன்னபடி தன் வீட்டுக்குள் போனாள். குஞ்சம்மாவின் வீட்டு வாசற்பக்கம் எட்டிப் பார்த்து அங்கு யாரும் இல்லை என்பதைத் தெரிந்து கொண்ட பிறகே உள்ளே போனாள்.

காரை ஓட்டிக் கொண்டிருந்த அஞ்சனா சொல்லி முடியாத மகிழ்ச்சியில் இருந்தாள்.

சில நொடிகள் மவுனத்தில் கடந்த பின்னர் ராமசாமி தொண்டையைச் செருமிக் கொண்டார்.

"உங்ககிட்ட ஒரு பெர்சனல் விஷயம் பேசணும். பேசலாமா? தப்பா எடுத்துக்க மாட்டேளே?"

அஞ்சனாவுக்கு இதயம் படபடத்தது. "தப்பா எதுக்கு எடுத்துக்கிறது? சும்மா சொல்லுங்கோ."

"...நான் பேசறது கொஞ்சம் அதிகப்பிரசங்கித்தனமானதுதான். பிடிக்கலைன்னா, வாய் விட்டு வெளிப்படையாச் சொல்லிட்டா, மேற்கொண்டு பேச மாட்டேன், மிஸ் அஞ்சனா."

"நான் உங்களைத் தப்பாவே எடுத்துக்க மாட்டேன், சார், சொல்லுங்கோ."

"பொம்மனாட்டிகள்கிட்ட அவா வயசைக் கேக்கக் கூடாதுன்னு சொல்லுவா. அது நாகரிகம் இல்லே. இருந்தாலும் கேக்கறேன்.

# மணிக்கொடி

உங்களுக்கு ஒரு இருபத்தஞ்சு வயசு இருக்குமா?"

"கிட்டத்தட்ட கரெக்டாச் சொல்றேன். இருபத்தஞ்சு முடிஞ்சு இருபத்தாறாவதுல இருக்கேன் இப்ப. ஏன், சார்?"

"காலாகாலத்துல கல்யாணம் பண்ணிண்டுடணும்மா. ஊர்ல நாலு பேர் நாலு விதமாப் பேசுவா. தவிர..."

"ஒரு நிமிஷம். இப்ப உங்களோட நான் கார்ல போறதைப் பார்க்கிறவா கூடத்தான் நாலு விதமாப் பேசுவா. ஆனா நமக்குத் தெரியுமோல்லியோ நாம தப்பு எதுவும் பண்ணலைன்னு?"



கணும். என்னை மன்னிச்சுடுங்கோ..."

"பெரிய பெரிய வார்த்தையெல்லாம் சொல்லாதீங்கோ, மிஸ் அஞ்சனா. நான் இப்ப உரிமை எடுத்துண்டு பேசினது ஒரு சகோதரன் மாதிரிதான்... என்ன இருந்தாலும்..."

அவரை மேலே பேச விடாமல் அஞ்சனா இடைமறித்தாள். "நான் உங்களை சகோதரன்னு நினைக்கல்லே, சார்... ஒரு நண்பர்னு



தான் நினைக்கிறேன். கூடப் பிறந்தா மட்டுந்தான் சார் சகோதரன். அது என்னமோ தெரியல்லே. முன்னபின்ன தெரியாதவாளை சகோதரன், சகோதரின்னு சொல்றதெல்லாம் எனக்கு அபத்தமா தோணறது..." - இவ்வாறு சொன்ன போது அஞ்சனாவின் நெடிய பார்வை கார்க் கண்ணாடி வழியே அவர் பார்வையில் கலந்தது.. இன்னதென்று புரியாத குழப்பத்தின் தாக்குதலில், ராமசாமி அவள் கண்களைக் கணநேரத்துக்கு மேல் பார்த்துக் கொண்டிருக்க முடியாமல் கார்க் கதவு வழியாகத் தெருவைப் பார்த்தார்.

"சரி, சார். இப்ப சொல்லுங்கோ. என்ன கேக்க வந்தேள்?"

"வேணாம்மா. அயல் ஸ்திரீகள்கிட்ட எனக்குப் பேசத் தெரியல்லேன்னு நினைக்கிறேன், விட்டுடுங்கோ...."

அஞ்சனா காரின் வேகத்தைக் குறைத்தாள். தெருவில் ஆள்நடமாட்டமோ பிற வண்டிகளின் போக்குவரத்தோ அந்த நேரத்தில் இல்லை. மெதுவாகத் தலை திருப்பினாள். சிறுத்துப் போன முகத்துடன் உட்கார்ந்து கொண்டிருந்த அவரைப் பார்த்ததும்

நெஞ்சில் பளாரென்று அடி வாங்கியது போல் அவருக்கு இருந்தது. முகம் கணத்துக்கும் குறைவான நேரத்தில் களை இழந்து போயிற்று. என்னதான் படித்த பெண்ணானாலும் இப்படி வெடுக்கென்றும் பளிச்சென்றும் அவள் எதிர்க்கேள்வி போடுவாள் என்பது அவரது எதிர்பார்ப்புக்கு அப்பாற்பட்ட விஷயமாக இருந்ததால், அவர் அதிர்ந்து போனார். 'ஏன் இப்படி ஒரு பேச்சைத் தொடங்கினோம்?' என்று ஆகிவிட்டது அவருக்கு. மேற்கொண்டு பேச்சை எப்படித் தொடருவது என்பது புரியாத கனத்த மவுனத்தில் அவர் ஆழ்ந்து போனார்.

சொல்லி முடித்த மறு கணமே அப்படி ஓர் எதிர்க் கேள்வியைத் தான் தொடுத்திருக்கலாகாது என்று அஞ்சனாவுக்குத் தோன்றியது.

"ஐ'ஆம் சாரி, சார். நான் அப்படி வெடுக்னு கேட்டிருக்கக் கூடாது. நீங்க அந்தப் பேச்சை எடுத்தது என்னோட நல்லதுக்காக, ஒரு நண்பர்ங்கிற முறையிலன்னு புரிஞ்சுண்டு நான் நாவடக்கத்தோட பதில் சொல்லி இருக்

அவள் மனம் கரைந்து போனது. உணர்ச்சி வயப்பட்டு விட்ட அஞ்சனா, இன்னது செய்கிறோம் என்ற உணர்வு அற்றுப் போய்த் தன்னிருக்கையின் முதுகில் சற்றே ஒதுங்கிப் பதிந்திருந்த அவரது கையில் தன் இடக் கையை வைத்து, "ஐம் சாரி... ப்ளீஸ். சொல்ல வந்ததை மனசு விட்டுச் சொல்லிடுங்கோ" என்றாள்.

ராமசாமி பதற்றத்துடன் தமது கையை இழுத்துக் கொண்டார். அப்போதுதான் அஞ்சனாவுக்குத் தனது செய்கையின் அர்த்தம் புரிந்தது. அவள் முகம் சிவந்து விட்டது.

"மறுபடியும் இதுக்காகவும் சேர்த்து சாரி, சார். நான் வேணும்னுட்டு செய்யல்லே, சார். தப்பா எதுவும் எடுத்துக்காதீங்கோ... சீக்கிரம் நான் கல்யாணம் பண்ணிக்கணும்னு சொல்ல வந்தேள், அதானே?"

**ரா**மசாமிக்கு நெற்றியில் சூடு கண்டது. 'என்ன பெண் இவள்! கொஞ்சம் கூட யோசிக்காமல் பிற ஆடவனின் கையைத் தொட்டு விட்டு 'சாரி' என்கிறாளே. பெண்கள் நிறையப் படித்தால் பால்பேதம் கூடப் போய் விடுமோ...?' அவர் சிரமப்பட்டுத் தம்மை ஒரு நிலைப்படுத்திக் கொண்டு பேசினார் :

"ஆமாம்மா! எனக்குத் தெரிஞ்ச நல்ல பையன் ஒருத்தன் இருக்கான். உங்க அப்பா கிட்ட அவனைப் பத்திப் பேசலாமோன்னு பார்த்தேன். உங்ககிட்ட ஒரு வார்த்தை முன் கூட்டி கேட்டுத் தெரிஞ்சு வெச்சக்காம அந்தப் பேச்சை உங்கப்பாகிட்ட நான் எடுக்கப்படாதில்லியா? அதான் கேட்டேன்..." என்றார் புன்னகையுடன்.

கார்க் கண்ணாடியில் அவரைப் புன்னகையுடன் ஏறிட்ட அஞ்சனா, சரியாக அரை நிமிட மவுனத்துக்குப் பிறகு, "நான் கல்யாணமே பண்ணிக்கிறதா இல்லே, சார்" என்றாள். கார் இப்போது அதிக விரைவு எடுத்து ஓடலாயிற்று.

"பின்னே சரிம்மா" என்று சுருக்கமாய் எதிரொலித்து விட்டு மவுனமானார் அவர். விரிவாக அதுகுறித்துத் தன்னுடன் வாதாடுவார் என்று எதிர்பார்த்த அஞ்சனாவுக்கு அவரது இரண்டு சொல் பதிலும் மவுனமும் தாங்கமுடியாத ஏமாற்றத்தைத் தந்தன. அதை ஏற்க விரும்பாதவளாக, "கல்யாணம் பண்ணிண்டா அப்புறம் காங்கிரஸ், கீங்கிரஸ்ஸெல்லாம் வெளியே வந்து சேவை செய்ய முடியுமா, சார்? அதான்" என்றாள்.

அவர் புன்னகை பூத்தார். "நீங்க சொல்றது ஓரளவுக்கு உண்மைதான்."

"ஓரளவுக்கு இல்லே சார், முழுக்க முழுக்க. அப்பாவையும் அம்மாவையும் திருப்திப்படுத்தறதுக்காகக் கல்யாணம் பண்ணிக்கிறேன்னு வச்சக்குங்கோ. எனக்கு வர்றவன் என்னோட நடவடிக்கைகளுக்கு எதிர்ப்புக் காட்டாதவனா இருக்கணுமே? இப்ப உங்க வீட்டையே எடுத்துக்குங்கோ. உங்க மிஸஸுக்கு நீங்க காங்கிரஸ்ல இருக்கிறது பிடிக்காட்டாலும், உங்களால அவர் அபிப்பிராயத்தைச் சட்டை பண்ணாம உங்க வழியில போக முடியறது. ஆனா ஒரு பொண்ணோட நிலைமை இப்படி இல்லியே? புருஷனோட அபிப்பிரயாத்துக்கு மாறா நடந்துண்டுட்டு இந்த நாட்டில ஒரு பொம்மனாட்டியால எதிர்நீச்சல் போட்டு மீள முடியுமா, சார்? சொல்லுங்கோ. அதுக்கு என்ன வழி? எனக்கு வர்ற புருஷன் உங்களை மாதிரி இருக்கணும். அது ஒண்ணுதான் வழி..."

இந்தச் சொற்களைக் கேட்ட மறு வினாடியில் தம் விழிகளைத் தாழ்த்திக் கொண்டார் ராமசாமி. ஏற்கெனவே சிவந்த முகம் மேலும் சிவந்து விட்டது.

அஞ்சனா, சொல்ல வந்ததைச் சொல்ல மறந்து, நினைவுபடுத்திக் கொண்டவள் போல், "அதாவது அந்த ஆளும் தேசபக்தி உள்ளவராகவும், பொண்டாட்டியையும் தேச




சிறப்பான வாடிக்கையாளர்கள் சேரன் சிரமமின்றி சீட்டுத்தொகை பெற சேரன் சிட் பண்ட்ஸ்

"சீட்டில் சேர விரும்பும் உங்களுக்கு சேரனும் சிலவற்றைக் கூற விரும்புகிறது"













வெகுமதிகளுடன் விழாக்காலம் அக்டோபர் 1 முதல் 15 வரை மட்டுமே

## ரூ.10,000/. முதல் 10,00,000/. வரை சீட்டு குரூப்கள் மற்றும் பரிசுகள் விவரம்

| தவணையும் மாதமும் | சீட்டின் மதிப்பு ரூ. | சந்தாதாரர்கள் பெறும் பரிசுகள் | அறிமுகம் செய்வோர் பெறும் பரிசுகள் |
|---|---|---|---|
| 250 x 40 | 10000/- | 1. ஸ்டெயின்லெஸ் டிஷ் | 10. ஸ்டெயின்லெஸ் கிண்ணம் |
| 500 x 30 | 15000/- | 2. ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் தட்டு + 2 கப் | 11. ஸ்டெயின்லெஸ் ஸ்நாக் பாக்ஸ் |
| 625 x 40 | 25000/- | 3. எஸ்பாஸ் காப்பர் பாட்டம் கடாய் | 12. எஸ்பாஸ் காப்பர் பாட்டம் மினி ஃபிரை பான் |
| 1000 x 50 | 50000/- | 4. மசாலா பாக்ஸ். | 13. மேஜை கடிகாரம் |
| 2000 x 25 | | | |
| 2500 x 40 | 100000/- | 5. தேக்ஷா செட்டு (1 x 3) | 14. க்வார்ட்ஸ் சுவர் கடிகாரம் |
| 4000 x 25 | | | |
| 5000 x 20 | | | |
| 5000 x 40 | 200000/- | 6. 1 கி. தங்க நாணயம் | 15. எஸ்பாஸ். சம்புடம் செட் (1 x 4) |
| 7500 x 40 | 300000/- | 7. எஸ்பாஸ் காப்பர் பாட்டம் கிச்சன் செட் (4 பீசஸ்) | 16. சிட்டிசன் கை கடிகாரம் |
| 20000 x 25 | 500000/- | 8. எஸ்பாஸ் காப்பர் பாட்டம் குக்கர் (7.5 லி) | 17. டின்னர் செட் ( 28 பீசஸ்) |
| 20000 x 50 | 1000000/- | 9. டபுள் கேசட் 2- இன் -1 | 18. கிராம்ப்டன் கிரீவ்ஸ் டேபிள் ஃபேன் |

சேவை செய்ய அனுமதிக்கிறவராகவும் இருக்கணும்... இல்லியா?" என்றாள்.

கார் ஓடிக் கொண்டிருந்தது. அவர் பதில் சொல்லச் சில வினாடி நேரம் அவகாசம் கொடுத்த பிறகு, அவர் ஒன்றுமே சொல்லாதிருக்கவே, "என்ன சார் பேசாம இருக்கேள்? நான் சொல்றது சரியா இல்லியா?" என்று சிரித்தாள் அஞ்சனா.

"ரொம்பக் கரெக்டும்மா."

காரை அவள் தன் வீட்டுக்கு முன்னால் நிறுத்திய பிறகும் அதிலிருந்து இறங்காமல் இருந்தார் ராமசாமி. "என்ன சார் யோசனை? எங்காம் வந்தாச்சு" என்று அவள் சிரித்ததும் அவர் இறங்க முற்பட்டார்.

## 17

காலணிகளை வழிநடையில் உதறிவிட்டு, ராமசாமியும் அஞ்சனாவும் அந்தப் பெரிய பங்களாவுக்குள் நுழைந்தார்கள். கூடத்தில் சோபா ஒன்றில் பத்திரிகை படித்தபடி உட்கார்ந்திருந்த பாமா இருவரையும் பார்த்ததும் எழுந்து கொண்டாள்.

"அப்பா வந்தாச்சா?" என்ற அஞ்சனா, "வாங்க, சார் இதுதான் எங்கம்மா..." என்று தாயை ராமசாமிக்கு அறிமுகப்படுத்தினாள்.

ராமசாமி, "நமஸ்காரம்" என்றார் கைகளைக் கூப்பி.

"இப்பத்தான் அஞ்சு நிமிஷத்துக்கு முந்தி வந்தார். காலலம்பப் பின்கட்டுக்குப் போயிருக்கார்."

அப்போது மேல்துண்டில் முகமும் ஈரக் கைகளையும் துடைத்தவாறு ராஜாராமன் அங்கு வந்தார். ராமசாமி எழுந்து நின்றார். பாமா உள்ளே போனாள்.

"அப்பா இவர்தான் மிஸ்டர் ராமசாமி."

ராஜாராமன் விரைந்து சென்று அவருடைய இரு கைகளையும் பிடித்துக் குலுக்கினார்.

"உட்காருங்கோ, உட்காருங்கோ. ரொம்ப நாளா உங்களைச் சந்திக்கணும்னு. இன்னிக்குத்தான் வாய்ச்சுது..." என்றபடி அவரும் உட்கார்ந்தார்.

"நான் உள்ளே போய்க் காப்பிக்குச் சொல்லி விட்டு வரேம்ப்பா."

"காப்பி குடிக்கிற நேரமா இது? வேணாம், மிஸ் அஞ்சனா."

"முதமுத எங்காத்துக்கு வந்திருக்கேள். நன்னாருக்கே?" என்றவாறு அஞ்சனா விரைந்து உள்ளே சென்றாள்.

"அம்மா அவருக்குக் காப்பி வேணும்."

"கலந்துண்டே இருக்கேன். நீ வந்து சொல்லணுமா என்ன? உங்கப்பா வேணாம்னுட்டார். இருந்தாலும் அவருக்கும் அரைகப் கலக்கறேன். நீயும்குடி. பேசி முடிச்சுட்டுச் சாப்பிட வர்றதுக்குக் கொஞ்ச நாழியாகுமோல்லியோ? நீ போ. நான் கொண்டு வரேன்."

"நல்ல அம்மா" என்று பாமாவின் கன்னத்தில் தட்டினாள் அஞ்சனா.

"பேசிப் பேசியே அப்பாவும் பொண்களும் அம்மாவை ஏமாத்துங்கோ."

அஞ்சனா சிரித்துக் கொண்டே கூடத்துக்குப் போனாள். போய் ராஜாராமனுக்கு அருகே அமர்ந்து கொண்டாள். மூவரும் ஆங்கிலத்தில் உரையாடினார்கள்.

"மிஸ்டர் ராமசாமி இப்படியே நாம் கூட்டங்கள் போட்டுப் பேசிக் கொண்டிருந்தால் மட்டும் போதுமென்று நீங்கள் நினைக்கிறீர்களா? உருப்படியாக ஏதாவது செய்ய வேண்டாமா? நம்மைப் பார்த்து வெள்ளைக்காரன் பயப்படும்படி ஏதாவது செய்தாலொழிய நரேந்திரநாத்தின் நடவடிக்கைகள் மாதிரி - அவனுக்கு நம்மீது பயம் வருமா?"

"வராதுதான். ஆனாலும், நாம் தற்போது செய்ய வேண்டியதெல்லாம் பிரசாரம் மட்டுமே என்பது என் கருத்து. பிரசாரத்தால் முதலில் மக்கள் மனங்களில் தேசபக்தியை விதைக்க வேண்டும். அதன் பிறகு நாடு முழுவதும் பரவலான அளவிலும் அதிகமான எண்ணிக்கையிலும் வெள்ளைக்காரனை அச்சுறுத்த வேண்டும். எங்கோ இங்கொன்றும் அங்கொன்றுமாக நடக்கும் பயங்கர

### அருள்வாக்கு

**ஒரு நல்ல காரியம் நடக்க வேண்டுமானால் அதை மூன்று நிலைகளில் நடக்குமாறு பண்ணலாம். ராஜாங்கம் உத்தரவு போடுவது போலக் கட்டளை செய்வது ஒன்று. இதற்குப் "பிரபுஸம்மிதை" என்று பெயர். பிரபுவான யஜமானன் வேலைக்காரனுக்கு ஆர்டர் பண்ணுவது பிரபுஸம்மிதை. பண்ணாவிட்டால் தண்டனை உண்டேயென்று, பிடித்தாலும், பிடிக்காவிட்டாலும் பயத்தோடு கட்டளைப் பிரகாரம் காரியத்தைப் பண்ணியாக வேண்டும். இப்படி அதிகார ஸ்தானத்திலிருந்து கொண்டு உத்தரவாகப் போடாமல் ஒரு ஸ்நேகிதன் நம்மிடம் ஒரு காரியத்தைச் செய்யச் சொன்னாலும் செய்கிறோம். இங்கே பயம் இல்லை. அன்பாலேயே செய்கிறோம். நமக்கு நல்லதையே நினைக்கும் ஸ்நேகிதன் அவன் என்ற நம்பிக்கை இருப்பதால் செய்கிறோம். இப்படி நம்மிடம் நல்ல மனஸ் உள்ள ஸ்நேகிதனுக்கு 'ஸுஹ்ருத்' என்று**

பெயர். அதனால் நம் ஸகா மாதிரியான ஸ்தானத்திலிருந்து கொண்டு நம்மை நல்ல காரியத்தில் ஏவுவது ''ஸௌஹ்ருத் ஸம்மிதை''. இதை விடவும் கலபமாகக் காரியத்தைச் சாதித்துத் தரவல்லது எது என்றால் பத்தினியின் பிரிய வசனம்தான். எஜமானின் உத்தரவு பாரமாக இருக்கிறது என்றால், அதையே சிநேகிதன் சொல்லும் போது லகுவாகிறது. இதைவிடவும் லேசாகி விடும், இதையே பத்தினி சொல்கிற போது. இது 'காந்தா ஸம்மிதை' எனப்படும். காந்தா என்றால் பத்தினி.



வேதம் பிரபுஸம்மிதம், புராணங்கள் ஸௌஹ்ருத் ஸம்மிதம், காவியங்கள் காந்தா ஸம்மிதம் என்று சொல்வதுண்டு. காவியம் என்ன செய்கிறது? கவி என்ன செய்கிறான்? யதார்த்தத்துக்கு கண், காது, மூக்கு வைத்து ஜோடனை பண்ணி அனைவரும் ரசிக்கும்படியாகச் செய்வதே கவியின் காரியம். ஸௌஹ்ருத் (நண்பன்) போல் உள்ளதை உள்ளபடி மட்டும் சொல்லாமல், புருஷன் நல்ல வழியில் போக வேண்டுமென்பதற்காகக் காந்தாவானவள் (பத்தினி) கூட்டியும், குறைத்தும், மாற்றியும் கூடப் பேசி அவனுக்கு இதமாக இருக்கும்படியாக 'தைல்' பண்ணி விஷயங்களைச் சொல்லி அவனை சரிபண்ணுவாள் என்பது ஐதிஹ்யம். இந்த காந்தாவின் ஸ்தானத்தில் காவியமும், பிரபுவின் ஸ்தானத்தில் வேதமும், இரண்டிற்குள் நடுவான ஸௌஹ்ருத்தின் ஸ்தானத்தில் புராணங்களும் இருந்து கொண்டு நமக்கு தர்மங்களைச் சொல்கின்றன.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

வாதச் செயல்களால் அவன் அசைய மாட்டான் என்பதே எனது கருத்தாகும்."

''மிஸ்டர் ராமசாமி சொல்லுவது தானப்பா சரி."

"உண்மைதான். அதே நேரத்தில் ஆங்காங்கு நரேந்திரநாத், சாவர்க்கர் போன்றவர்களின் நடவடிக்கைகளும் நடந்து கொண்டுதான் இருக்க வேண்டும். சிறுகச் சிறுக அவன் மனத்தில் பயத்தை ஏற்படுத்துவதிலும் நமது சுதந்திரம் துரிதப்படும்."

பாமா கொண்டு வந்த காப்பியை ருசித்து அருந்தியவாறே சுவாரஸ்யமாக அரசியல் பேச, நேரம் போனதே தெரியவில்லை.

திடுமென்று விழித்துக் கொண்டவராக ராமசாமி, "ஒன்பது மணியாயிடுத்தே, அப்ப நான் கௌம்பட்டுமா? உங்க மிஸஸ் கிட்ட சொல்லிடுங்கோ. நான் வரேன், மிஸ் அஞ்சனா!" என்று கூறியவாறு எழுந்தார்.

இருவரும் வாசல் வரை சென்றார்கள். "ஆமா? ஒம்பது மணிக்கு மேல எப்படி ஆத்துக்குப் போவேள்? நான் கார்ல கொண்டு விடறேன்" என்றார் ராஜாராமன். வலுக்கட்டாயமாக அவரைத் தம் காரில் ஏற்றிக் கொண்டு புறப்பட்டார். அஞ்சனா கதவைச் சாத்திக் கொண்டு உள்ளே போனாள்.

அப்போது கூடத்துக்கு வந்து சோபாவில் உட்கார்ந்த பாமா, "அந்த ராமசாமிக்கு எத்தனை வயசு இருக்கும்?" என்றாள்.

"தெரியாதும்மா."

"கல்யாணம் ஆனவர்தானே?"

மடியில் இருந்த வார ஏடு ஒன்றைப் புரட்டிக் கொண்டிருந்த அஞ்சனா சட்டென்று தலை உயர்த்திப் பார்த்தாள். பாமாவின் பார்வை நீட்சியாக அவள் மீது பதிந்திருந்தது.

"ஏம்மா? எதுக்குக் கேக்கறே? அவருக்குக் கல்யாணம் ஆகி ஒரு அஞ்சு வயசுப் பிள்ளை கூட இருக்கு."

பாமாவிடமிருந்து ஒரு பெருமூச்சு கிளம்பியது. "பிரும்மசாரிப் பிள்ளையா இருந்தா உனக்குப் பார்க்கலாமேன்னுதான்."

அஞ்சனா பதில் சொல்லவில்லை. மறுபடியும் பத்திரிகையைப் புரட்டலானாள். ஆனால் அவள் முகம் சற்றே சிவந்ததைக் கண்டு பாமா வியப்படைந்தாள். எப்போது திருமணம் பற்றிப் பேசினாலும், 'உனக்கு வேற வேலை கிடையாது' என்றோ, அல்லது 'நான் கல்யாணம் பண்ணிக்கிறதா இல்லே, இப்போதைக்குன்னு எத்தனை தரம் சொல்றது?' என்றோ கத்தும் வழக்கமுள்ள அஞ்சனா, மவுனமாக இருந்ததும் அதைவிட அவள் முகம் சிவந்ததும் பாமாவை இன்னதென்று மிக இலேசாய்ப் புரிந்ததன் விளைவான கலவரத்திலும் ஆழ்த்தின.

''அவனோட பொண்டாட்டியோடல்லாம் பேசிப் பழகி இருக்கியா?"

"ஓ. பார்த்திருக்கேன். ஆனா, பழகி இருக்கேன்னு சொல்ல முடியாதும்மா" என்றாள் அஞ்சனா. அம்மாவுக்கு ஏதோ நெருடல் என்பதை உள்ளுணர்வாய்ப் புரிந்து கொண்டதன் விளைவாக, 'நல்ல மாதிரி' என்ற சொற்களைச் சேர்த்துக் கொண்டாள்.

(தொடரும்)

# காந்தீயம் தோற்பதில்லை

தஞ்சை மகேஷ் ப்ரியன்

நதியூரின் அரசமரத்தடி மேடையிலிருந்து, ஆற்றங்கரையோர படுவவரை... எல்லோருடைய உதடுகளும் ஓய்வின்றி அதைப் பற்றியே... அந்தக் கொடுமையைப் பற்றியே வார்த்தைகளைச் சிந்தின.

"கண்ணுசாமி வாத்யாரு பாவம்யா...! ஊருலயே அவருதான் புண்ணியவான். அவருக்குப் போயி எடைஞ்ச குடுக்கறான்க, பாவிங்க. ஏழேழு சென்மத்துக்கும் அவனுவ கொலம் நாசமாப் போவ..."

"ஒண்ணா, ரண்டா.. மூணற வேலி! அவ்ளோ சவுக்குக் கன்னுங்களையும் பச்சைப்புள்ளய வெட்றாப்ல, வெட்டிப் போட்டுட்டானுவளே! அவன்க பாடை கௌம்பி, வூட்ல கள்ளி மொளைச்சி... கரு நாவம் புத்து வெய்க்க..."

"போன மொற இப்படிதான்கெ! நாஞ் சொல்றது அஞ்சாறு வருஷத்துக்கு முந்தின அருதப்பழச கத. அப்போ... பாவிப் பயல்கெ ஊருலெ மழையே பேயாம, ஏழை, பாளைங்க அல்லாடுனிச்சிங்க...! நாவு நனைக்கத் துளியூண்டு தண்ணி கூட கெடைக்கலை. கொளம், குட்டையெல்லாம் நெருப்பாட்டம் தகதகத்துப் போச்சு. சேரிப்பயல்கெல்லாம் சேந்து கொடும்பாவி கட்டி இழுத்தான்கெ. பொண்டுக மாரியாத்தா கோவில்லெ ஒப்பாரி வெச்சு, மூக்கைச் சிந்தி, கட்டி அழுதாளுக...! ஊம். தெனறுபுடிச்ச வானம் கண்ணத் தொறக்கவேயில்ல...

"அப்போதான், கண்ணுசாமி வாத்யாரு ஊருக்கு வந்த புதுசு. ஊர்லெ பெரிய மனுஷன்கெ எவனுமே சேரிப்பாளையத்துக்கு ஒதவாதத பாத்துப்புட்டுக் கண்ணுகலங்கி, கை குடுக்க முன்ன வந்தாரு. தாம் வூட்டு சோத்துக்குன்னு கொஞ் சத்த வெச்சுக்கிட்டு, மீதி நெல்லையெல்லாம் சேரியிலெ கொண்டாந்து சப்ளை பண்ணினாரு. அதோட குடிதண்ணி மோல... தங் கொல்லையிலெ, இருக்கற கெணறயே வுட்டாரு மவராசன்.

"பாத்தான்கெ பெரிய மனுஷன்கெ. பொறுக்கலை அவனுங்களுக்கு. 'சேரிப்பயல்களுக்கு நம் மாளு, நம்ம கொலம், மேல்சாதிக் காரன் இவன் எப்படி அவனுவள கொல்லைவரை வுட்டான்? எதோ நெல்ல குடுத்தான். அத்தோட வுட வேண்டியதுதானே? வுட்டா நாளக்கியே வூட்டுக்குள்ளே கொண்டாந்து சேரிநாய்ங்களை குடி வெச்சிடுவான்!' போல்ருக்கே...!' அப்படின்னு கொதிச்சி.. ராவோட ராவா... கண்ணுசாமி வாத்யாரோட வெக்கப்போரு மூணை கொளுத்தி வுட்டு, குடிதண்ணி கெணத்துலயும் பாசாணத்தக் கொட்டிப்புட்டான்கெ!"

"அடி ஆத்தி...! அப்றோம்...?"

"யாரு செஞ்ச புண்ணியமோ, காளியாத்தா மாயையாலே... விடியக்காலை நாலு மணிக்கே அவரு மவன் அசலூரு போறதுக்காக... கெணத்துல தண்ணி மொண்டு குளிக்கபோக... அதான் படிச்ச வெவரமான புள்ளையா... நாத்தத்தை வெச்சுக் கண்டுபுடிச் சுட்டு. வெவகாரம் ஊருபூரா பரவி, தீயாட்டம் எரிஞ்சிச்சி. அல்லோலம்தான்."

"மேல... சொல்லு..."

"அப்றோமென்ன... அவரு மவன்தான் தாண்டி தலைகீழா குதிச்சி போலீஸ்கிட்டக்க சொல்லி, பாசானம் கலந்தவன்களப் புடிச்சி முதுவுத் தோலை உறிச்சிடலாம்னு துடிச்சிச்சி. அதுக்கெல்லாம் கண்ணுசாமி வாத்யாரு வுடலை. குறுக்கே படுத்து மறிச்சிட்டாரு. 'யார்டா கலந்துருக்கப் போறா...? யெல்லாம் நம்ம சொந்தக்காரப்பயல்கெதானே? போலீஸ்கன்னு போய்ட்டா, பெறவு கோர்ட்டு, கேசுன்னு அலையணும். இன்னிக்கி மாட்டி வெச்சாச்சுன்னா, நாள பின்ன அவனுவ மொவத்துல முழிக்க வேணாமா? வுடுடா, போனா போவட்டும்'னு அழாத கொறையா மவன அடக்கிப்புட்டாரு. வெகாரமும் அத்தோட அடங்கிப் போச்சுன்னு வெச்சிக்கயேன். ஆனா... இந்த மொற என்ன ஆவுதோ...?"

சடாரென அத்தனை உதடுகளும் ஒட்டிக் கொண்டன. வார்த்தைகள் சமாதியாயின. மௌனம். எதுவுமே தெரியாத பாணியில், அவரவர் வேலையில் கவனம்.

காரணம், தூரத்தில், கண்ணுசாமி வாத்யார், நடந்த சம்பவத்தின் தடயம் இல்லாத முகம். கவலைபடராத நடை. கனமான உடம்பின் கம்பீரமான குலுங்கலோடு, புன்முறுவல் மிளிர வந்து கொண்டிருந்தார்.

"ஏலேய் வேலு..."

"கூப்ட்டீகளா சாமீ..."

"ஆமாண்டா! பத்துப் பதினைஞ்சு

ஆள்களை வெச்சுக்கிட்டு வெட்டிக் கெடக்கற, சவுக்குக் கன்னுங்களையெல்லாம் கொல்லையை விட்டு அப்புறப்படுத்திடு. எம்மவன் ஊர்லயிருந்து வந்து... கொல்லையைப் பாத்துப்புட்டான்னா ரகளை பண்ணிடுவான்."

அந்த வார்த்தைகளைக் கூறுகிறபோதே சிதறும் புன்னகை. விழிகளில் வழியும் பெருமிதம், துள்ளல், துடிப்பு! மீசையை நீவிக் கொண்டார்.

வெய்யிலில் வழுக்கைத் தலை பளபளத்தது. கதிரவன் தன் முகத்தை அதிலே பார்க்கிற அளவுக்கு. காது மடல்களில் பூத்த வியர்வைத் துளிகளைக் கைவிரல்களால் சுண்டிச் சிதறியவாறே -

"ஒரு ரெண்டு ரூபா கூலியாட்களுக்கு ஏத்திக் கொடுத்தேங்கறதுக்காகத்தானே இப்படி பண்ணிட்டான்கெ? இன்னைக்கு சாயங்காலம் இதையெல்லாம் சுத்தப்படுத்திட்டு வர்ற ஆட்களுக்கு மூணு ரூபா ஏத்தித் தர்றேன்டா கூலி. மறுபடியும் என்ன பண்றானு வன்னு பார்க்கறேன்...!"

கர்ஜனை.

வாலிபம் தாண்டிய கிழச்சிங்கத்தின் கம்பீரம். என்னதான் பண்ணிவிடுவார்கள் என்கிற அலட்சியம்.



**"யோவ், குடிகாரக் குமரேசனோட வீட்டுக்கு எப்படிப் போகணும்?"**

**"சரியாப் போச்சு, நீதான்யா குடிகாரக் குமரேசன்!"**

**"அது தெரியுது, அவன் வீட்டுக்குப் போக வழி எப்படின்னுதானே கேட்கிறேன்!"**

**— எம். அசோக்ராஜா**

ஒன்றன்மேல் ஒன்றாய் வெட்டி வீழ்ந்து கிடந்த, பருவத்தைத் தொடும் முன்பே பாழாகி விட்ட சவுக்குக் கன்றுகளின் மீது நடந்து கொல்லையை விட்டு வெளியே வந்தவரின் விழிகள், உதடுகள், காதுமடல்கள் என மேனி பூராவும் படபடப்பு. விவகாரம் யாருக்குத் தெரியக்கூடாது என நினைத்திருந்தாரோ அவனுக்குத் தெரிந்து விட்ட பயம். கால்கள் தடுமாறின. தன் எதிரே முறைப்பாய் நின்றிருந்த துரையரசனை - தன் மகனை நோக்கினார்.

"ஏம்ப்பா... இப்படி பண்றீங்க...?"

துரையரசன் பொருமினான். இளஇரத்தம். புறமுதுகு காட்ட வெட்கப்படும் வாலிப வனப்பு. முகமெங்கும் கோபரேகைகள்.

"எப்படி...?"

கண்ணுசாமி வாத்தியார் மெல்லிய குரலில் மகனைக் கேட்டார், எதுவுமே தெரியாதவராய்.

"வெளையாடுறீங்களாய்யா? இன்னமும் நீங்க மாறலை. மாறவும் போறதுல்லே. சவுக்குக் கொல்லையை நாசம் பண்ணிட்டு எவனோ ஜாலியா இருக்கான். நீங்க என்னடான்னா... எனக்கும் சொல்லி விடாம, அவனுங்களுக்கும் எதுவுமே ஏற்பாடு பண்ணாம, சவுக்கு கன்னுங்களை சுத்தப்படுத்திக்கிட்டு ச்சே..! பத்திக்கிட்டு எரியுது எனக்கு. துவசம் பண்ணினவன்களை விட, இப்ப உங்க மேலதான் ஆத்திரம் வருது..."

"துரையரசா பாத்து, பாத்து! நீ கத்துற கத்துலே.. இருதயம் தெறிச்சிடப் போவுது. மெதுவாப் பேசுடா. ஏங் கோபப்படறே? என்ன ஆயிட்டு இப்போ...?"

"என்ன, ஆயிட்டா? ச்சே! ஏண்டா உங்களுக்கு மகனாப் பொறந்தோம்னு இருக்கு. நம்ம வீட்டு சேதியை மூணாம் மனுஷன் மூலமாத் தெரிஞ்சி ஓடி வர்ற நெலயில நானிருக்கேங்கறதை நெனைக்கறப்போ... நாக்கைப் புடுங்கிக்கிட்டுச் சாகலாமான்னு கூட தோணுது. சரி சரி... புறப்படுங்க. போலீஸ் ஸ்டேஷன் வரைக்கும் போய்ட்டு வந்திடுவோம்."

'போலீஸ் ஸ்டேஷன்' என்றதுமே கண்ணுசாமி வாத்யாருக்குக் குபீரென வியர்த்தது. நிமிர்ந்தார்.

"போலீஸ் ஸ்டேஷன் எதுக்குடா? அவனுங்க வந்து என்னத்தப் பண்ணிடப் போறாங்க. துண்டாப் போன சவுக்குக் கன்னுங்க, திரும்ப எந்துரிச்சு நின்னுடவா போவுது? நல்லவன், கெட்டவன், அறிஞ்சவன், அறியாதவன்.. சம்பந்தமேயில்லாதவன், எல்லாரையும் போட்டு நாலு நாளைக்கு பெல்ட்டால விறுவான்கெ. காரணகர்த்தா வேற பக்கமா... சொகுசா இருக்க, அப்பாவிங்களோட வயித்தெறிச்சல் நமக்கெதுக்கு?"

"எனக்கு உங்க சொற்பொழிவு தேவையில்லை. இப்ப நீங்க எங்கூட ஸ்டேஷனுக்கு வரப் போறீங்களா இல்லியா...?"

துரையரசன் இறுதியான குரலில் கேட்டான்.

"நான் வர முடியாது."

"அப்பா...!" கத்தினான்.

"சுத்தாதே! நம்ம சவுக்குக் கொல்லையை நாசம் பண்ணினது யாரா இருக்கும்னு நெனைக்கறே..? எல்லாம் நம்ம பயல்கதான். அவனுங்க பகை நமக்குத் தேவையா? நாமளும் தெனமும் ஸ்டேஷனுக்கு அலைஞ்சிகிட்டு இருக்க முடியுமா...?"

"அப்படின்னா... நீங்க ஸ்டேஷனுக்கு வர மாட்டிங்க?"

"ஆமா..."

"ரொம்ப சந்தோஷம். ஆனா... நான் விட மாட்டேன். ஸ்டேஷனுக்குப் போயி... சந்தேகமான பசங்கமேலயெல்லாம் கம்ப்ளைண்ட் எழுதிக் கொடுத்துட்டு வந்தா அவங்க ஆக்ஷன் எடுக்காமலா போயிடுவாங்க?"

துரையரசன் ஆக்ரோஷமாய்ச் சீறி நகர -

"நில்லு! உன் இஷ்டப்படி நீ கம்ப்ளைண்ட் குடு. வேணாங்கலை. அதே மாதிரி.. அவனுங்க விசாரணைக்கு எங்கிட்ட வர்றப்போ... 'சரியா வளரலை. அதான் வெட்டிப்புட்டேன். கடலை போடலாம்னு தோணுச்சி, அதான்...! எம்மவனுக்கு எதுவுமே தெரியாது. அவன்கிட்டே யாரோ



"அந்த ஆளும் கட்சி எம்.எல்.ஏ. அமெரிக்கா போனது தப்பாப்போச்சு!"

"ஏன்?"

"அமெரிக்காவிலுள்ள சுதந்திரதேவி சிலைக்கு 'அம்மா' வோட பேரைச் சூட்டணும்னு அறிக்கை விட்டிருக்காரே!"

— எஸ். முகம்மது யூசுப்

புரளி கிளப்பி விட்டுருக்காங்க. அதோட அவன், அன்னைக்கு ஊருலயே இல்லே'ன்னு என் இஷ்டம் போல, சொல்றதையும் தடுக்காதே!"

விஷமமாய்ப் பார்க்க -

துரையரசன் தலையில் அடித்துக் கொண்டான்.

"என்ன எழவோ செய்ங்க! எனக்கென்ன? நீங்க இனி இப்படியே இருந்தா, இன்னைக்கு சவுக்குகன்னுங்க வெட்டுப்பட்டது மாதிரியே.. நாளைக்கு உங்க தலையும் வெட்டுப்படத்தான் போவுது. நான் வர்றேன்."

துரையரசன் ஓடும் ரயிலாய்த் தடதடத்து வெளியேறினான்.

துரையரசனுக்கு டவுனில் வேலை. மனைவி, குழந்தை எல்லோரும் அங்கேதான் இருக்கிறார்கள். கண்ணுசாமி வாத்யார் மட்டும்தான் இங்கே கிராமத்தில் இருக்கிறார். வீடு, வாசல், நிலங்கள், வாத்தியார் வேலை வேறு. ரிடையர் ஆக இன்னும் வருஷங்கள் இருக்கின்றன. அப்புறம் எப்படி டவுனுக்குப் போக முடியும்? துரையரசன் மட்டும் எப்போதாவது வருவான். அப்பாவைப் பார்த்துப் போவான். இந்த முறை முதல் இனி வருவானோ, மாட்டானோ?

வந்தாலும் சரி. வரவில்லையென்றாலும் சரி.

மனதைப் பாறையாக்கி கொண்டார்.

**வி**டாத மழை. ஆற்றில் வெள்ளம். சின்னதாய் மழை ஓய்ந்த போது பள்ளியை விட்டு வீட்டுக்குப் புறப்பட்டார் 'கண்ணுசாமி வாத்தியார்.

மேகங்களின் சூழ்ச்சியால் கருமை படர்ந்த மாலை நாலரை மணி. அப்பிக் கிடந்த நிசப்தம். தொலைதூரப் பனங்காட்டு நரிகளின் ஓலம். மேனியை உரசிப் பறக்கிற பழந்தின்னி வெளவால்களின் படபடப்பு.

வேகம் கூட்டி நடந்தார்.

கால்கள் ஈரமண்ணில் பின்னின. வழுக்கியது. குடை எடுத்து வராததன் அலட்சியம், நிறைய அவஸ்தையைத் தந்தது. கதர் வேஷ்டி, சட்டை உடம்போடு ஒட்டி ஒட்டி இம்சை பண்ண... தேக்கு மரப் பின்னணியில் -

ஆற்றங்கரையோர பாதையைக் கடந்து கொண்டிருந்த போதுதான் அது நிகழ்ந்தது.

திமுதிமுவென கூட்டமாய் ஏழெட்டு பேர். கைகளில் சவுக்குக் கட்டை. முகத்தில் கொலைவெறி. கண்களில் சாராயச் சிவப்பு. அவருக்கு முன்னே மறித்தபடி நின்றார்கள்.

"ஏய் கிழவா... நில்லு."

நின்றார்.

"என்ன...?"

"ரெண்டு ரூபா ஏத்தினதோட நிறுத்தாம, திரும்ப மூணாக்கிட்டியே? உம்மனசுல என்னதான் நெனைச்சுக்கிட்டே, ம்... விட்டா நாளைக்கு சேரிநாய்ங்களுக்கு பொண்ணுக் குடுத்து, பொண்ணு எடுத்து, மச்சான் மாமாவா ஆக்கிடுவே போலிருக்கே...?"

முதலில் நின்று அகங்காரமாய்ப் பேசியவன் யாரென்று தெரிந்தது. அவன் பழைய பிரசிடெண்ட் பரமுவின் மகன். பரமு வேறு யாருமில்லை. அவருடைய ஒன்று விட்ட முறைப்பெண்ணைக் கட்டியவன்தான்.

கண்ணுசாமி வாத்தியாருக்கு உடம்பு சூடானது.

"இப்ப என்ன பண்ணனும்னு வந்துருக்கீங்க? நான் அப்படி என்ன தப்புப் பண்ணிட்

டேன்? காலையிலேர்ந்து சாயங்காலம் வரைக்கும். ஏய்க்காம உண்மையா உழைக்கிற உழைப்பாளிங்களோட கோரிக்கையை ஏத்து.. ஒரு ரண்டு ருவா கூலியை ஏத்திக் குடுத்தேன், அவ்ளோதான். எம்மனசுக்கு நியாயமாப்பட்டது, செஞ்சேன். இதக் கேட்க, என் உரிமையில தலையிட நீங்க யாரு? நான் என்ன கம்மாக்கரையில நின்னு கன்னிப் பொண்ணுங்க கையைப் புடிச்சி இழுத்தேனா? இல்லே... எவன் சொத்தையாச்சும் களவாடிட்டேனா? நான் உழைக்கறேன். உழைக்கறவன்களையும் மதிக்கறேன். இது தப்பா? இதுக்குப் போயி என்ன மறிச்சி... ச்சே! எனக்கா இவ்வளவு கட்டைங்க... அரிவான்ங்க? ஒரு சின்னக் கத்தி போதாது..."

"ஏய்-இவன்கிட்ட என்னடா பேச்சு? ஒரு வாட்டி கெணத்துல வெஷம் வெச்சுப் பாத்தோம். மறுவாட்டி சவுக்குக் கொல்லையை நாசம் பண்ணினோம். இவன் திருந்தலை. இனியும் திருந்தப் போறது இல்லே... வெட்டுங்கடா... இவனை..."

பரமு மகன் கத்தினான்.

அடுத்த நிமிஷம் -

வெண்ணெய்க் கட்டியைச் சீவுவது மாதிரி அவருடைய உடம்பு பூராவும் 'சதக்' 'சதக்' என மாறி மாறி... அரிவாள்கள் சீற சவுக்கட்டைகள் முழங்காலிலும், தோள் பட்டையிலும் இறங்க -

இரத்தம் பீறிட்டது.

கண்ணுசாமி வாத்தியாரின் பூ உடம்பு துவண்டது. துடித்தது. ஆனால் அத்தனைக்கும் அவர் ஓடவோ, தப்பிக்கவோ நினைக்கவில்லை. கத்தவும் இல்லை. கதறவும் இல்லை.

இரத்தச் சகதியாய் அவர் கிடக்க-

அந்த வெறிபிடித்த கூட்டம் நகர முயன்றது.

"போதும். கெழவன் இனி பொழைக்க மாட்டான். பொறப்புடுங்கடா!"

திடீரென கண்ணுசாமி வாத்தியாரின் உடம்பில் சலனம். துடிப்பு.

குபீரென எழுந்து நின்று, தடுமாறி விழுந்தார்.

உதடுகள் சிரமாய் விரிந்தது. கண்களில் நீரோட்டம்.

"ஏய்... ஒரு நிமிஷம் நில்லுங்கடா...!"

நின்றார்கள். திரும்பினார்கள்.

"கெழம் என்னவோ சொல்லப் போவுதுடா!"

"என்னோட உடம்பைத் தூக்கி ஓடுற இந்த ஆத்துல போட்டுட்டுப் போங்கடா... பாவிங்களா! 'கண்ணுசாமி வாத்தியாரு ஆத்து வெள்ளத்துல அடிச்சிக்கிட்டு போய்ட்டாரு'ன்னு பேராகட்டும். ஏந்தெரியுமா...?"



கணவன் : இன்னைக்குத்தான் சரக காப்பி நல்லா இருக்கு... ரொம்ப காலத்துக்குப் பிறகு.

மனைவி : அடப்பாவமே...! வேலைக்காரிக்கு வெச்சிருந்த காப்பியை எடுத்து நீங்க குடிச்சிட்டீங்களா?

— சீர்காழி வி. ரேவதி

---

பேச முடியவில்லை. சிரமப்பட்டுப் பேசினார்:

"கீழ்சாதிகாரங்கல்லாம் எனக்கு நீங்க பண்ணின அக்கிரமம் தெரிஞ்சிச்சின்னா சும்மா இருக்க மாட்டான்கெ. துடிச்சி எழுவான்கெ. கையில கம்பு, கழி, அரிவாள்னு எடுத்துக்கிட்டு... சீறிப் பாய்வான்கெ. ஊரே இரத்தக் களறியா, சாம்பல்மேடா ஆயிடும்டா! என்னால.. என்னால... மத்தவங்க... பாழாகறத நா... நா... விரும்பலை. இனியாவது... வெட்டு, குத்து, வன்முறை இல்லாம இருங்க... ம்.. தூக்குங்க. தயவுசெஞ்சி... தூக்குங்க. ஆத்துல என்உடம்பை வீசிட்டுப் போங்க..."

கைகளைக் குவித்து கண்ணீரோடு அவர் கெஞ்சிய கெஞ்சல், துடித்த துடி, பதறிய பதறல்.

பரமுவின் மகன் ஒரு வினாடி அவரையே பார்த்தான்.

'சாகும் தருவாயிலும், தன்னால மத்தவங்க பாழாகக் கூடாது'ங்கற அவருடைய வார்த்தைகள் முள்முள்ளாய் உறுத்த, உள்ளுக்குள் ஏதோ இளகியது.

நிமிர்ந்தான்.

"எலேய், வாத்யாரைத் தூக்குங்கடா..."

தூக்கினார்கள். ஆற்றை நோக்கி நடந்தார்கள்.

"நில்லுங்கடா. நான் ஆத்துல வீசறதுக்கு தூக்கச் சொல்லலை. அவரை ஆசுபத்திரிக்கிக் கொண்டு போவத்தான் தூக்கச் சொன்னேன்."

அத்தனை வலியிலும் மனசுக்குள், கண்ணுசாமி வாத்யாருக்கு உற்சாகம் பீறிட...

"காளி.. போயி... காளைமாட்டு வண்டிய சுருக்கா கொண்டாடா!"

பரமுவின் மகன் உரக்கக் கத்தினான்.

அந்த கத்தலில்தான் எத்தனை மிருது, மென்மை, பணிவு! கண்ணுசாமி வாத்தியாரை போல!

**"விபத்து போன்ற அவசரக் காலங்களில், விமானப் பணிப்பெண்களை சரியாக வேலை செய்ய விடாமல் புடைவை தடுக்(கு)கிறது. இதனால் அவர்கள் வேகமாகச் செயல்படத் தகுந்தபடி சல்வார் கமீஸ் போன்ற வேறு டிரஸ்கள் வழங்குவது பற்றி யோசிக்க வேண்டும்!"**

இப்படியொரு ஆலோசனையை வழங்கியிருப்பவர் நீதிபதி வி.ஏ. மோஹந்தா. போன வருடம் ஔரங்காபாத் அருகே 53 உயிர்களைப் பலிவாங்கிய விமான விபத்துக்கான பின்னணியை ஆராய்ந்த அவர், 25 விபத்துத் தவிர்ப்பு ஆலோசனைகளை வழங்கினார். அதில் ஒன்றுதான் இந்தப் 'புடைவைப் புறக்கணிப்பு'!

உண்மையில் புடைவை உடுத்துவதென்பது பெண்களின் அவசரப் பணிகளுக்கு இடைஞ்சலான ஒரு விஷயம்தானா? "புடைவையும் ஓரளவுக்கு அவசர கால நடவடிக்கைகளுக்கு முட்டுக்கட்டையாக இருக்கலாமே தவிர, அதைவிடப் பூதாகரமான பிரச்னைகளெல்லாம் இருக்கின்றன!" என்கிறார்கள், விமானப் பயணிகள் பாதுகாப்புச் சங்கச் செயலாளர் கும்மடி ஜே. சத்ய நாராயணாவும் தலைவர் சுதாகர் ரெட்டியும்.

உதாரணமாக அவர்கள் ஒன்றைச் சுட்டிக்காட்டுகிறார்கள். "விமானங்களின் எமர்ஜென்சி வாசல் அருகே, வயதில் மிகவும் சிறியவர்களோ, வயதானவர்களோ அமரக் கூடாது. அந்தக் கதவைத் திறக்கக்கூடிய பலசாலிகளாக இருப்பவர்கள் மட்டுமே அமரலாம் என்பது விதி. ஆனால், இது நடைமுறையில் எந்த அளவுக்குக் கடைப் பிடிக்கப்படுகிறது?" என்று கேட்கிறார்கள், அவர்கள்.

"நீதிபதி தமது அறிக்கையின் ஆலோசனைகளில் ஒன்றாகச் சேலை பற்றிக் குறிப்பிட்டிருந்தாலும் அது பற்றிய அறிவிப்பு ஒன்றும் எங்களுக்கு வரவில்லை!" என்கிறார் இந்தியன் ஏர்லைன்சின் தலைமை விமானப் பணிப்பெண்ணான எல்லிஸ் தாஸ்.

• வீணா



இருபது வருடங்களாகப் பறக்கும் இவர், "புடைவை என்பது நமது பாரம்பரியத்தின் சின்னம். இந்தியப் பெண் என்று சொல்லும்போதே புடைவை கட்டிய உருவம்தானே நினைவுக்கு வரும்! எனவே, இதை நான் ஒரு போதும் இடைஞ்சலாகக் கருதியதில்லை. மற்ற பணிப் பெண்களும் இவ்வாறு கருதுவதாகத் தெரியவில்லை" என்கிறார்.

இருப்பினும் இப்போது புதிதாக இறகு முளைத்திருக்கும் ஜெட் ஏர்வேஸ், தமானியா

ஏர்வேஸ் போன்றவை, தங்கள் விமானப் பணிப்பெண்களுக்குப் புடைவை யூனிஃபாரம் கொடுக்கவில்லை.

"முதலில் நாங்கள் 'காரா' என்ற சைனீஸ் எம்ப்ராய்டரி வேலைப்பாடுகளுடைய சிவப்பு வெயிஸ்ட் கோட், முழுக்கை வெள்ளை ப்ளவுஸ், சிவப்பு - கறுப்புப் புள்ளிகள் போட்ட சாம்பல் நிற ப்ளீட்ட் ஸ்கர்ட் - இந்த பார்சி உடையைத்தான் ஏர்ஹோஸ்டஸ்களின் யூனிஃபாரமாக வைத்திருந்தோம். இப்போது சிவப்பு ஸ்கார்ஃபும் நீல ஒன் பீஸ் உடையுமாக மாற்றியமைத்திருக்கிறோம்!" என்கிறார் தமானியா ஏர்வேஸின் மக்கள் தொடர்பு அதிகாரி ஜி.எஸ். பிரசாத்.

"புடைவை மிகப் புராதனமான உடைகளில் ஒன்று; புதுமைக்கும் பொருந்தி வரும் என்றாலும் எங்கள் விமானப் பணிப்பெண்கள், பல ரோஜாக்களுக்கு மத்தியில் ஒரு லில்லி மலர் போல -சர்வீஸில் மட்டுமல்ல; தோற்றத்திலும் தனித்துத் தெரிய வேண்டாமா? அதனால்தான் பிரத்யேகமாக வடிவமைக்கப்பட்ட யூனிஃபாரத்தைக் கொடுத்திருக்கிறோம்!" என்கிறார் ஜெட் ஏர்வேஸின் இன்ஃ பிளைட் பொது மேலாளரான நவல் ராய்.

"ஏர்ஹோஸ்டஸ் விஷயத்தை விடுங்க. எங்களைப் போன்ற பள்ளி - கல்லூரி மாணவிகளுக்குப் புடைவை ஒரு பிரச்னைதான்!" என்கிறார் கல்லூரி மாணவியான வீணா நாராயணன்.

"இரு சக்கர வாகனங்களில் செல்லும் போது, திடீரென்று பிரேக் போட்டுக் காலைக் கீழே ஊன்றி நிற்கிற சமயங்களில் புடைவை நிச்சயமாகத் தடுக்கத்தான் செய்கிறது. சல்வார் என்றால் இந்தத் தொல்லைகள் ஏதும் இல்லை. அதோடு, புடைவைத் தலைப்பு சக்கரங்களில் சிக்கிக் கொள்ளுமோ என்கிற பயமும் இல்லையே!" என்கிறார் வீணா.

"இதுபோன்ற பிரச்னைகள் வராமலிருப்பதற்காக இரு சக்கர வாகனங்களை ஓட்டுபவர்களுக்கு 'செயின் கார்டு', பின்னால் உட்காருபவர்களுக்கு 'சாரி கார்டு' என்று இரண்டு கவசங்களைப் பொருத்தித் தருகிறோமே!" என்கிறார் ராம்கே ஏஜென்சீஸின் உரிமையாளர் ஆர். ஆர். மனோகர்.



• சுதாகர் ரெட்டி

"இந்தப் பிரச்னையை நாங்கள் தீர ஆலோசித்து அலசியிருக்கிறோம்; கணக்கெடுப்பு கூட நடத்தியிருக்கிறோம்!'' என்கிறார் செயின்ட் எப்பாஸ் பெண்கள் மேல்நிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியை திருமதி பாலின் டேனியல்.



• சத்யநாராயணா

# ரோஜாக்களுக்கு மத்தியில் ஒரு லில்லி மலர்!

"இன்றைய பள்ளி மாணவிகள் பெரும்பாலும் சைக்கிளில்தான் வருகிறார்கள். அதற்குப் பாவாடை தாவணியும் சரி, புடைவையும் சரி, நிச்சயமாக இடைஞ்சல்தான். அதோடு இத்தனை துணிகளையும் இந்தத் தண்ணீர் பற்றாக்குறைக் காலத்தில் துவைத்தெடுப்பதும் சிரமமானது. ஆனால் சல்வார் அப்படியில்லை. விலையும் மலிவு. பராமரிப்பதும் சுலபம். உடலையும் முழுமையாக மறைக்கும் ஆடையாக இருப்பது இன்னொரு வசதி.

"இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டுதான், பாவாடை - தாவணி, சேலை போன்ற நமது பாரம்பரியச் சின்னங்களை வருத்தத்தோடு ஒதுக்கி வைத்து விட்டு, சல்வார் கமீஸை உடுத்தச் சொல்லியிருக்கிறோம்!" என்கிறார் திருமதி டேனியல்.

"நமது பாரம்பரிய உடையான வேஷ்டியை விட்டு விட்டுத் தங்கள் வேலைகளுக்கு வசதியாகப் பாண்ட் - சட்டைக்கு ஆண்கள் மாறின மாதிரி, நாங்களும் மாறிக் கொண்டிருக்கிறோம்; இதிலென்ன தவறு?" என்பது தான் இன்றைய இளம்பெண்களின் பதில்.

**- நிர்மலா சக்ரவர்த்தி**

பேசிய டாக்டர் பதிலளிக்கிறார்

# இந்த மன உளைச்சலுக்கு என்ன மருந்து?

என். சுந்தரராசன், தஞ்சாவூர்.

● எனக்கு 20 ஆண்டுகளாக அடிவயிறு மிகவும் கனமாக உள்ளது. நாளாக நாளாக கனம் அதிகரித்து வருகிறது. எல்லா மருத்துவ சோதனைகளும் நார்மல் ஆக இருக்கிறது. அடிவயிறு கனமாக இருக்க என்ன காரணம்? தற்சமயம் சரியாகச் சாப்பிட முடிவதில்லை.

●● மலச்சிக்கலைப் பூரணமாக நீக்க வேண்டும். அதற்குரிய முயற்சிகள் எடுத்தாக வேண்டும். மலச்சிக்கலுக்கு ஒரு முக்கிய காரணம், போக வேண்டிய சமயத்தில் போகாமல், அசந்தர்ப்பத்தின் காரணமாகத் தள்ளிப் போடுவதுதான். இன்னொன்று, ஆகாரம் குறைவாகச் சாப்பிடுவது. அதிக உணவு உண்டால்தான் மலம் வெளியேறும்; உணர்ச்சித் தூண்டுதல் (Ballast) ஏற்படும். அதைத் தருகிற ஃபைபர் டயட் (கீரை, பச்சைக் காய்கறி) சாப்பிட வேண்டும். பழங்கள் சாப்பிட வேண்டும். இரவு இரண்டு கோப்பை நீரும் பருக வேண்டும். காலையில் எழுந்தவுடன் இரண்டு கப் நீர் பருக வேண்டும். சிறிது உலாவிவிட்டு வர வேண்டும். இவை தவிர தவிட்டு பிஸ்கட்டுகளை (Bran Biscuits) சாப்பிடலாம். Isaphgool எனும் உமி வகையைச் சேர்ந்த ஒரு பவுடரை நீரில் கலந்து பருகலாம். இந்தச் சிக்கல் தீர்ந்தாலே அடிவயிறு கனம் குறையும்.

எல். கதிரேசன், சென்னை - 1.

● எனக்கு 19 வயதில் கொட்ட ஆரம்பித்த முடி இன்னும் நின்றபாடில்லை. மூன்று வருடங்களாகக் கொட்டியதில் ஏறக்குறைய வழுக்கை. இதனால் மன உளைச்சல். எந்த வேலையும் ஒழுங்காகச் செய்ய முடிவதில்லை. இனிமேலாவது கொட்டாமலிருக்க என்ன செய்ய வேண்டும்?

●● நல்ல உணவைச் சாப்பிடுங்கள். இரத்தச் சோகையை, இரும்புச் சத்து கொண்ட டானிக் மூலம் நிவர்த்தி செய்ய முடியும். தலையில் இருக்கும் சருமத்தை நன்றாக மஸாஜ் செய்து வந்தால் முடிகளுக்கு ரத்த ஓட்டம் அதிகரித்து, முடி ஆரோக்கியமாக இருக்க வாய்ப்பு அதிகம்.

மிஸ்டர் கதிரேசன், உங்கள் செயல்பாடுகள் பிறரைக் கவர்கிற மாதிரி இருந்தால் போதுமே? தலை வழுக்கை பற்றியும், புறத்தோற்றம் பற்றியும் வீணாகச் சிந்தித்து, உங்கள் வளமையான எதிர்காலத்தைப் பாழாக்கிக் கொள்ளாதீர்கள். அறிவாளிகள், சுறுசுறுப்பு மிக்கவர்கள், தொழில்துறை, விஞ்ஞானத்தில் வெற்றி கண்டவர்கள் எல்லாருமே ஏறக்குறைய வழுக்கைதான். கவலையை உதறுங்கள்!

புலவர். ச. மு. விமலானந்தன், திருப்பத்தூர்.

● நோய் எதிர்ப்புச் சக்தி இன்மையால் பல நோய்கள் வருகின்றன என்றும், அதற்கான மருந்து கண்டறியப்பட்டுள்ளதாகவும் தெரிகிறது. அந்த மருந்தின் பெயர் என்ன?

●● நோய் எதிர்ப்புச் சக்தி தரும் இம்யுனோகுளோபின் இஞ்செக்ஷன் இருக்கிறது. முதலில் ஒரு இஞ்செக்ஷன் போட்டுக்கொண்டு, பிறகு ஒரு மாதத்துக்கு அப்புறம் ஒன்று போட்டுக்கொள்ள வேண்டும். அடுத்த இஞ்செக்ஷன் ஆறு மாதத்துக்குப் பிறகு. சாதாரணமாக ஒருவகை ஜாண்டிஸ் வந்தால் நோய் எதிர்ப்புச் சக்தியைக் கூட்ட இந்த இஞ்செக்ஷனைப் போடுவார்கள். வேறு சில நோய்களுக்கும், எதிர்ப்புச் சக்தியை அதிகரிக்க இது கொடுக்கப்படுகிறது. ஆனால் நடைமுறையில், இவ்வளவு சக்தி வாய்ந்த மருந்துகளைச் சிறு சிறு நோய்களுக்கும் கூடப் போட்டுக் கொள்ளுவது உசிதமானது அல்ல.



- டாக்டர் பி. ஆர். சுப்பிரமணியம்

## வீட்டின் பேரில் கடன்

- வீடு/மனை/ஃப்ளாட் பேரில் கடன் வழங்கப்படும்
- மிகக்குறைந்த வட்டிக்கு
- விரைந்த சேவை
- சென்னை மாநகராட்சி எல்லைக்குள் இருக்கவேண்டும்



## நகைக் கடன்

- மிகக்குறைந்த வட்டிக்கு
- 22 ct. தங்க நகைகளுக்கு 1 கிராமுக்கு ரூ.300/- வீதம் கடன் வழங்கப்படும்.
- R.D. கட்ட தேவையில்லை
- எந்த சார்ஜும் வசூலிப்பதில்லை.







## திருவி.க.நகர் பெனிஃபிட் ஃபண்டு லிமிடெட்

தலைமை அலுவலகம் : 10, 5வது தெரு, ஆண்டாள் அவின்யு (திரு. வி. க. நகர் பஸ் நிலையம் அருகில்) சென்னை - 82. போன் : 610390 ஞாயிறு விடுமுறை.

பாரிஸ் கிளை : 48, வெங்கடாசல முதலி தெரு, முதல் மாடி, (பட்டணம் கோவில் அருகில்), பார்க் டவுன், சென்னை - 3. போன் : 565760. ஞாயிறு விடுமுறை.

தி. நகர் கிளை : 50, ரங்கநாதன் தெரு, தி.நகர், சென்னை - 17. போன் : 4344324 ஞாயிறு விடுமுறை.

- பங்குதாரர்களுக்கு மட்டும் -

---

# எழில் கேசத்தின் ரகசியம்!



## அஸ்வினி

ஹோமியோ ஹேர் ஆயில்




விரைவில் எல்லோர் நினைவிலும் நிலைத்து நிற்கும் ஹேர் ஆயில் — அஸ்வினி!

**அஸ்வினிக்கு நன்றி!**

நான் மூன்று வருடங்களாக அஸ்வினி ஹோமியோ ஹேர் ஆயிலை உபயோகிக்கிறேன். இதில் குறிப்பிடத்தக்க மருத்துவ குணங்கள் இருக்கின்றன. மாதந்தோறும் வந்துகொண்டிருந்த என் ஒற்றைத் தலைவலியும் கூட இப்பொழுது வருடத்திற்கு ஓரிரு முறையாகக் குறைந்துவிட்டது. உதிர்ந்து கொண்டிருந்த தலைமுடியும் இப்பொழுது உதிர்வதில்லை. நம்முடைய அனைத்து கேசப்பிரச்சனைகளையும் தீர்த்துவிட வந்துள்ள ஓர் அரிய ஹோமியோ மருத்துவத் தயாரிப்பு — அஸ்வினி.

எம். கோபால கிருஷ்ணன்,
ஐ. ஏ. எஸ் (Retd.),
முன்னாள் சிறப்பு தலைமை செயலாளர்,
ஆந்திரப்பிரதேச அரசு.

விற்பனையாளர்கள் :

**அஸ்வினி ஹோமியோ & ஆயுர்வேதிக் பிராடக்ட்ஸ் லிமிடெட்**

5-283, எச். பி. ரோடு, மூஸாபேட், ஐதராபாத் 500 018

நினைவுகள்

PATTING THE POOR AND
TAPPING THE RICH
SHOULD BE OUR APPROACH.

- பேரறிஞர் அண்ணா

எழுதத் தொடங்குகிறேன்!

இன்று செப்டம்பர் 15.

அண்ணா பிறந்த நாள்.

1947; அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நான் பட்டப்படிப்பு படித்துக் கொண்டிருந்த நேரம். அண்ணா அவர்களின் சொற்பொழிவுகளைக் கேட்டு நரம்புகள் புடைக்க வியந்திருக்கிறேன். ஒரு புதிய சகாப்தத்தின், ஒரு புதிய அலையின் நாயகனாக அவர் எனக்குத் தோற்ற மளித்தார். அப்பொழுது எனக்கு வயது பதினேழு. அண்ணாவின் அரசியல் எழுச்சியையும் கலை உலக எழுச்சியையும் தள்ளி நின்று ரசித்த ஆயிரமாயிரம் இளைஞர்களில் நானும் ஒருவனாக இருந்தேன்.

அண்ணாவின் எழுத்து, மேடைப் பேச்சு, திரைக் கதையமைப்பு, வசனம் ஆகியவை என்னை வெகுவாகக் கவர்ந்து, நான் அவருடைய வெறிபிடித்த ரசிகனாக இருந்தபோதிலும் அவரது அரசியல் கருத்துக்கள் சிலவற்றில் எனக்கு உடன்பாடில்லை. ஆனால்...

1947 ஆம் ஆண்டு; பாரத நாடு சுதந்திரத் திருநாடாக மலர்ந்த அந்த ஆண்டு. அந்த ஆகஸ்ட் 15 ஆம் தேதியை சுதந்திர நாளாகக் கொண்டாடக் கூடாதென்றும், ஒரு துக்க நாளாகக் கடைப்பிடிக்க வேண்டுமென்றும் பெரியார் ஈ.வெ.ரா. அவர்கள் அறிவித்தார்கள்.

ஆனால் திராவிடக் கழகத்தின் ஒரு முன்னணித் தலைவராக அண்ணா அவர்கள் இருந்தும் பெரியார் அவர்களின் இந்தக் கருத்தை வெளிப்படையாக எதிர்த்துப் பேசினார்.

இந்த ஒரு நிகழ்ச்சியே பேரறிஞர் அண்ணா அவர்களை ஒரு தேசியத் தலைவராக்கி விட்டது. இதுவரை ஒரு மாநிலக் கட்சியின் முன்னணித் தலைவராக மட்டுமே இருந்து வந்த அவரது மதிப்பு, தேசிய அளவில் விருட்சமாக வளரத் தொடங்கியது. அவர் மீது நான் வளர்த்துக் கொண்ட பாசமும் மரியாதையும் பன்மடங்காக உயர்ந்து, என் மனத்தில் இமயமாக எழுந்து நின்றது.

அப்பொழுதும் தள்ளி நின்று அபிமானம் வளர்த்த ஒரு ரசிகன்தான் நான்!

அண்ணாவின் நாடகங்கள் 'ஓரிரவு,' 'வேலைக்காரி' போன்றவை, நானும் நாடக உலகில் சாதனைகள் புரிய வேண்டுமென்கிற எனது நாடக தாகத்திற்கும், வெறிக்கும் எண்ணெய் வார்த்தன.

கலைவாணரும் அண்ணாவும் சேர்ந்து அளித்த 'நல்ல தம்பி' என்கிற திரைப்படம் பார்த்தேன். அதில் ஒரு காட்சி வருகிறது.

ஓர் ஏழைத் தாயையும் அவளது மகளையும் காண நல்லதம்பி அவர்களது குடிசைக்கு வருகிறார். தாய் மட்டும் குடிசை வாயிலின் முன் நிற்கிறாள்; நல்லதம்பிக்குத் தன் மகளை அறிமுகம் செய்து வைக்க அந்தத் தாய் குடிசையினுள் பார்த்துத் தன் மகளைக் கூப்பிடுகிறாள்.

உள்ளிருந்து மகளின் குரல் மட்டுமே கேட்கிறது, "இதோ வர்றேம்மா" என்று. திரும்பத் திரும்ப இந்த வார்த்தைகளே ஒலிக்கின்றன. மகள் வெளியே வரக்காணோம். தன் மகளைக் கூப்பிட்டு வருகிறேன் என்று சொல்லித் தாய் குடிசையினுள்ளே போகிறாள். சில நிமிடங்கள் கரைகின்றன. பிறகு

• தாமரை நெஞ்சம்



மகள் வருகிறாள்; மகள் மட்டுமே வருகிறாள். தாய் வராமல் மகள் மட்டுமே வெளியே வந்ததற்குக் காரணம் இப்பொழுது பளிச்சென்று தெரிய வருகிறது. இருவருக்கும் இருப்பது ஒரே சேலை!

தாய் உடுத்தியிருந்த சேலையையே இப்பொழுது மகளும் உடுத்திக் கொண்டு வந்திருக்கிறாள். அது 'கறுப்பு வெள்ளை'க் காலமாக இருந்தாலும் கிருஷ்ணன் - பஞ்சு இயக்கத்தில் தெளிவாகப் புரிகிறது.

வீட்டின் வறுமையை இதைவிடத் துல்லியமாக எடுத்துக் காட்ட முடியுமோ?

பசுமரத்தாணி பதிந்தது போல் இந்தப் புதுமையான காட்சி என் நினைவில் பதிந்து போயிற்று.

காட்சிகளைப் புதுமையாகச் சிந்திக்க வேண்டுமென்று சொல்லும்போது எனது உதவியாளர்களிடம் இந்த 'நல்ல தம்பி' காட்சியைத்தான் நான் எடுத்து விளக்குவேன்.

**செ**ன்னையில் பேரறிஞர் அண்ணா அவர்களை நேரிலே சந்திக்கும் வாய்ப்பினை எனது நாடகத்தின் மூலம் நான் அடைந்தேன். எனது 'மேஜர் சந்திரகாந்த்' நாடகத்திற்குத் தலைமை தாங்கி அண்ணா அவர்கள் நாடகத்தைப் பாராட்டிப் பேசிய அந்த நாள் என் வாழ்வில் ஒரு பொன்னாள்.

ஆம்! அது எனக்கு ஒரு Red Letter Day. தொடர்ந்து எனது நாடகங்கள் அனைத்திற்கும் அண்ணா அவர்களை அழைத்திருக்கிறேன். ஆரம்பம் முதல் இறுதிவரை அமர்ந்து நாடகத்தை மிகவும் கவனமாகப் பார்ப்பார்கள். ஒப்புக்கு மட்டும் தலைமை தாங்காமல் நாடகங்களை அவர் முழுவதும் பார்த்து, ரசித்துப் பாராட்டிப் பேசும் விதம் அண்ணா அவர்களின் தனிச் சிறப்பு.

நாடக ஆசிரியரான இயக்குனரான என்னை மட்டுமல்லாமல் நாடகத்தில் பங்கு கொண்டு சிறப்புற நடித்த கலைஞர்கள் அத்தனை பேரையும் அவர்கள் ஏற்ற குணசித்திரங்கள், நடித்தவர்களின் நடிப்புத் திறமை, மேடை நாடக நுணுக்கங்கள் எல்லாவற்றையும் விமர்சித்துப் பாராட்டிப் பேசுவார்.

ஒரு முறை சொன்னார் :

"ஓர் ஆசிரியர் மேடை நாடகத்தில் என்னவெல்லாம் சொல்ல நினைக்கிறார் என்பது ஒரு பக்கம்; என்னவற்றையெல்லாம் வெளிப்படையாகச் சொல்லாமல் நாசூக்காக மறைத்திருக்கிறார் என்பது இன்னொரு பக்கம். இந்த இரண்டையுமே உணர்த்துவதுதான் ஒரு நல்ல நாடகத்தின் அடையாளம். பாலசந்தர் அதனை அழகாகக் கற்று வைத்திருக்கிறார்" என்று சொன்னார்.







**ம**றக்க முடியாத இன்னொரு நிகழ்ச்சி. 'தாமரை நெஞ்சம்' திரைப்படத்தை இயக்கி முடித்துவிட்டேன். அந்தப் படத்தை அவருக்குப் போட்டுக் காட்ட விரும்பினேன். எனது அருமை நண்பரும் தயாரிப்பாளருமான இராம அரங்கண்ணல் அவர்கள் என்னை அண்ணா இல்லத்திற்கு அழைத்துச் சென்றார்கள்.

மகிழ்ச்சியோடு படம் பார்க்க ஒப்புக் கொண்டார். கலைவாணர் அரங்கிலே அவருக்காகத் திரையிட்டோம். படம் பார்த்து முடிந்ததும் அண்ணா தரப்போகும் தீர்ப்புக்காகக் காத்திருந்தேன்.

தனக்கே உரித்தான புன்முறுவலுடன் ஒரே ஒரு வாக்கியத்தைக் கூறிவிட்டு அண்ணா காரில் ஏறிப் போய் விட்டார்.

அவர்கள் சொன்ன அந்த ஒரே வாக்கியம் :

"It is as though you had never seen any film before."

சட்டென்று எனக்குப் புரியவில்லை! புரிவதற்குச் சற்று நேரம் பிடித்தது:

"சினிமாவையே முதல் முறையாகப் பார்த்த மாதிரி ஒரு excitement இந்தப் படத்தைப் பார்த்தவுடனே இருந்தது!"

இதுதான் அவர் சொன்ன வாக்கியத்தின் விளக்கம். இதைவிடச் சிறந்த பாராட்டு இருக்கவே முடியாது

**கே. பாலசந்தர்**

என்று எனக்குத் தோன்றியது.

அவருடைய ஆங்கிலப் புலமையின் உதாரணம்தான் கட்டுரையின் ஆரம்பத்திலே நான் சொல்லியிருக்கும் மேற்கோள். எந்த ஆங்கிலக் கவிஞனுக்குமே கூடத் தோன்றாத ஒரு பதப் பிரயோகம்!

டெல்லியில் பாராளுமன்றத்தில் அவர் பேசிய ஆங்கில உரையிலிருந்து எடுக்கப்பட்டது.

எதிர்நீச்சல் படம் தயாராகிவிட்டது. கால வெள்ளத்தில் எதிர்நீச்சலடித்துப் பல வெற்றிகளைக் கண்ட அந்தப் பேரறிஞரை 'எதிர்நீச்சல்' படத்தைக் காணச் செய்ய வேண்டுமென்று பேரவாக் கொண்டேன். அப்பொழுது அவர் தமிழகத்தின் முதலமைச்சர். தவிர, அமெரிக்கா சென்று புற்று நோய்க்காகச் சிகிச்சை பெற்றுக் கொண்டு, தாயகம் திரும்பியிருந்த நேரம்.

நண்பர் அரங்கண்ணல் அவர்களுடன் நுங்கம்பாக்கம், அவின்யு ரோடு - அண்ணா இல்லம் சென்றோம்.

மெல்லிய குரலில் "இன்றுள்ள உடல் நிலையில் படம் பார்க்க வர முடியுமா?" என்று மிகவும் தயங்கியபடியே கேட்டேன்.

"நான் அதைப் பார்க்க வேண்டும்; நிச்சயமாக வருகிறேன்" என்றார் அண்ணா.

கற்பகம் ஸ்டுடியோவில் படத்தைத் திரையிட உடனே ஏற்பாடு செய்யப்பட்டது.

அன்று பொங்கல் திருநாள்.

கலைவாணர் என்.எஸ்.கே. சிலையை வாணிமகால் அருகே திறந்து வைத்த அன்றே 'எதிர்நீச்சல்' படத்தைப் பார்க்கவும் வந்தார்.

பார்த்துவிட்டு அவர்கள் சொன்ன வார்த்தைகள்... "பொழுதுபோக்கு அம்சங்களோடு நல்ல message இருக்கிறது; 'வெற்றி வேண்டுமா? போட்டுப் பாரடா எதிர்நீச்சல்!' யாரு? வாலி எழுதினதா...? ரொம்ப நல்லா எழுதியிருக்காரு... அவர்கிட்டே சொல்லுங்க..."

கலைவாணர் சிலை திறப்புவிழாதான் அண்ணா அவர்கள் கலந்து கொண்ட கடைசி பொது நிகழ்ச்சி. திரைப்படங்களை எப்பொழுதும் விரும்பிப் பார்க்கின்ற அண்ணா பார்த்த கடைசித் திரைப்படம் 'எதிர்நீச்சல்.'

**TAIL PIECE :**

அண்ணா அவர்கள் எனது 'மேஜர் சந்திரகாந்த்' நாடகத்தை அண்ணாமலை மன்றத்தில் பார்த்துக் கொண்டிருந்த போது, அவர் எப்படி ஒவ்வொரு காட்சியையும் ரசிக்கிறார்என்று திரைச்சீலைகளின் இடுக்குகளின் வழியாக அவரையே பார்த்துக் கொண்டிருப்பேன்... நாடகத்தில் மேஜர் ஒரு வசனம் சொல்வார் :

"அரசியல், அரசியல்வாதிகள் கையில் இருக்கக் கூடாது" என்று.

நான் அண்ணாவையே பார்த்துக் கொண்டிருக்கிறேன். அவர் சட்டென்று தன் பக்கத்தில் அமர்ந்திருந்தவரைப் பார்க்கிறார். அவரும் இவரைப் பார்க்கிறார். இருவரும் ஏதோ பேசிக் கொள்கிறார்கள். இந்த வசனத்தை அண்ணா அவர்கள் ரசிக்கவில்லையோ என்று எனக்குத் தோன்றியது. ஆனால் மேடையில் பாராட்டிப் பேசிய போது சொன்னார்கள்.

"அரசியல் அரசியல்வாதிகள் கையில் இருக்கக் கூடாது என்று அருமையானதொரு வசனத்தை பாலசந்தர் எழுதியிருக்கிறார். அதை நான் மிகவும் ரசித்தேன். ஆம்! அரசியல் வெறும் வார்த்தை வீரர்களின் கையில் இருக்கக் கூடாது; செயல் வீரர்களின் கையில் இருக்க வேண்டும் என்பதைத்தான் பாலசந்தர் சுட்டிக்காட்டியிருக்கிறார் என்று தோன்றுகிறது..." என்று சொன்னார்கள்.

பல ஆண்டுகள் கழித்து, இன்னொரு மேடையில் இதே வசனத்தையும் அண்ணா அவர்கள் கொடுத்த இந்த விளக்கத்தையும் நான் குறிப்பிட்டுப் பேசினேன். அன்று தலைமை ஏற்றிருந்தவர் கலைஞர் அவர்கள்.

"அரசியல் அரசியல்வாதிகள் கையில் இருக்கக் கூடாது; மக்கள் கைகளில் இருக்க வேண்டும்" என்பதுதான் பாலசந்தருடைய நோக்கமாக இருந்திருக்கும் என்று கலைஞர் அவர்கள் இன்னொரு விளக்கம் கொடுத்து வழக்கம் போல் கூட்டத்தினரின் கைதட்டல்களை அமோகமாகப் பெற்றுக் கொண்டார்.

நான் இதை ஆமோதிக்கவும் செய்யாமல் மறுக்கவும் செய்யாமல் ஒரு புன்னகையோடு அமர்ந்திருந்தேன்.

மேடை நாடக வசனம் எழுதும் போது, 'அ'ணாவுக்கு 'அ'ணா என்கிற பாணியில் எது கையோடு எழுதினேன். ஆனால் "அரசியல் வாதிகள் கையில்" என்கிற பதத்திற்கான உண்மையான விளக்கத்தை நான் எப்போதும் கொடுக்கவில்லை: அவரவர்கள் ஊகத்திற்கும் interpretation க்கும் விட்டுவிட்டேன்.

(நினைவலைகள் தொடரும்)

'தாமரை நெஞ்சம்' படம் உதவி :
**பிலிம் நியூஸ் ஆனந்தன்**

● யோகஹரீராஜ், பம்பாய்.
*? புறம்போக்கு என்றால் என்ன நயினா?*
! அந்த நாளில் அனாதை, ஓட்டாண்டி என்று அர்த்தம்; இந்த நாளில் பணக்காரன், பட்டா போடறவன் என்று அர்த்தம்!

● எம். பிரபு, குமராட்சி.
*? தற்போது வரும் சினிமாக்களில் பொழுது போக்கு தவிர வேறு என்ன இருக்கிறது?*
! ஏன், பார்ப்பவர்கள் கெட்டுப் போக நிறைய விஷயம் இருக்கிறதே!

● ஆர். சங்கரநாராயணன், குணசீலம்.
*? "என்னால் பயனடைந்தவர்கள் என்னை விட்டுப் போவது என் ஜாதகபலன்" என்று நொந்து போகிறாரே, மு.க.?*
! அட ஆண்டவனே! பகுத்தறிவுக்குமா ஜாதக நம்பிக்கை!

● எஸ். நாரம்புநாதன், காஞ்சிபுரம்.
*? நடிகை ஜெயலலிதா, எதிர்க்கட்சித் தலைவி ஜெயலலிதா, முதலமைச்சர் ஜெயலலிதா - உம்மைக் கவர்ந்தவர் யார்?*
! ஆதிபராசக்தி ஜெயலலிதா!

● மு. இரவிச்சந்திரன், சேலம்.
*? அறிஞர் அண்ணாவின் புத்தகங்களை அரசுடைமை ஆக்கி விட்டார்கள், சரி. அண்ணாவின் கொள்கைகளை?*
! எல்லோரும் சுவாசிக்க வேண்டும் என்ற நல்லெண்ணத்தில் காற்றிலே பறக்க விட்டு விட்டிருக்கிறார்கள்!

● ஆர். அப்துல்சலாம், திருச்சி.
*? "கச்சத் தீவை இலங்கையிலிருந்து குத்தகைக்கு எடுப்போம்" என்று ஜெயலலிதா கூறுகிறாரே?*
! நேற்று "மீட்போம்" என்றார்; இன்று "குத்தகைக்கு எடுப்போம்" என்கிறார் நாளைக்கு "மறந்துவிடுவோம்" என்பார்.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.
*? இட ஒதுக்கீட்டை ஆதரித்து முலயாம் சிங் யாதவ் நடத்திய பந்த்தில் உ.பி. உயர் நீதிமன்ற நீதிபதிகள் போலீஸ் பாதுகாப்புடன் தாக்கப்பட்டிருக்கிறார்களே?*
! உச்சநீதி மன்றத்துக்கு விஷயம் கொண்டு போகப்பட்டதில் சி.பி.ஐ. விசாரணைக்கு உத்தரவிட, உ.பி. உயர்நீதிமன்றத்தின் மானம் ஓரளவு காக்கப்பட்டுள்ளது. நீதிபதிகள் மட்டுமா? 'பந்த்'தில், அதன் நோக்கத்தில் ஒப்புதல் இல்லாததால் கதவடைப்பு செய்யாமலிருந்த பலரும் போலீஸாரால் தாக்கப்பட்டுள்ளனர். இத்தகைய அராஜகம் நடக்கும் என்பதால்தான் 'அரசு பந்த் அறிவிக்கக் கூடாது; தொழிலோ, வியாபாரமோ, பணியோ செய்யும் உரிமையைக் காத்துத் தருவதுதான் அதன் கடமை' என்பது.

# புறம்போக்கு என்றால் என்ன, நைனா?



● வைகை வசந்த், மதுரை.
*? 'புரட்சித் தலைவி ஜெயலலிதா மாணவர் சேவைப் படை' அமைக்கப்பட உள்ளது என்று பொன்னுசாமி கூறியுள்ளாரே?*
! முதலில் பஸ்ஸைக் கொளுத்தக் கற்றுத் தருவார்கள் போல.

● இரா. சம்பத்குமார், ராசிபுரம்.
*? வாழப்பாடி ராமமூர்த்தியைத் தலைவர் பதவியிலிருந்து நீக்காவிட்டால், தீக்குளிக்கப் போவதாக மூப்பனார் பேரவை அறிவித்திருப்பது பற்றி...?*
! ஆகா! என்ன ஒற்றுமை உணர்வு! எவ்வளவு பாசப் பிணைப்பு! காங்கிரஸ்காரர்கள் நிச்சயம்


'ஜெ' • நாது வகை!


• கொள்கைகள் என்னாச்சி?


• ஜாதக பலன்!



• நெர்வஸ்...



• சேவைப் படை

• அரசு பந்த்



தமிழ்நாட்டில் காமராஜர் ஆட்சியைக் கொண்டு வந்து விடுவார்கள்!

● **சசிகுமார், சென்னை.**

*? சோனியா காந்தியின் சென்னை - ஸ்ரீபெரும்புதூர் விஜயத்துக்கு தமிழ்நாடு காங்கிரஸ் சிறப்பான ஏற்பாடுகள் செய்தது பற்றி...?*

! அதையேன் கேட்கறீங்க? ஜெ. பக்தர்கள் பொறாமைப்படற அளவுக்கு போஸ்டர், பானர், நாளிதழ் விளம்பரம், கட்அவுட்... எட்ஸட்ரா.. அவர் அரசியலிலிருந்து ஒதுங்க நினைக்க நினைக்க, அவரை அதற்குள் இழுத்துப் போட்டு ஆதாயம் தேட எண்ணுகிறார்கள். இந்த ஆர்பாட்டத்தைப் பார்த்து சோனியா அருவருப்பு அடைந்தால் சரி; ஆசைப்பட ஆரம்பித்தால் விபரீதம்!

● **எஸ். மதியழகன், திருவெண்ணெய்நல்லூர்.**

*? பி.டி. உஷா ஆசியப் போட்டியில் கலந்து கொள்ளப் போகிறாராமே?*

! லக்னோவில், 200 மீட்டர் ஓட்டத்தில் போட்டிக்கு உடன் ஓடி வர எல்லோருமே மறுத்ததால், வெறுத்து ஒதுக்கப்பட்டது போல் உணர்ந்து, மனம் குமுறி அழுது, இனி சர்வதேச தடகளப் போட்டிகளில் பங்கேற்கவே போவதில்லை என்று முடிவெடுத்தார். 'ஐ ரியலி பிடி பி.டி. உஷா' என்று சொல்லி வாய் மூடுமுன் மீண்டும் மனமாற்றம்!

● **எஸ். இலங்கேசுவரன், வேலூர்.**

*? மூன்று அணிகளையும் தோற்கடித்து இறுதிப் போட்டிக்குள் நுழைந்த இலங்கை அணியினரின் ஆட்டம் பற்றி...?*

! ரணதுங்காவின் போராடும் குணத்துக்குக் கிடைத்த பரிசு. ஆனால் கோப்பையை அஷாரிடம் கொடுத்து விட்டாரே!

● **டி. யோகவதனம், சென்னை.**

*? கிரிக்கெட்டில் இந்தியா தொடரை வெல்லுமா என்ற கேள்விக்கு சந்தேகமாய் எழுதினீர்களே? இப்போ என்ன சொல்கிறீர்கள்?*

! ஹி... ஹி.. வாபஸ் வாங்க வேண்டியது தாங்க... ஆனாலும் பாருங்க, அஷாரே சொல்லியிருக்காரு தாம் ரொம்ப நர்வஸ்ஸா இருந்ததாக. நம்பிக்கை இருந்தா நர்வஸ்னஸ் ஏதுங்க? அதைவிட ஸ்ரீலங்கா நர்வஸ்! ஏகப்பட்ட ரன்அவுட்! எப்படியோ சிங்கர் கோப்பை நம் வசம் என்பது த்ரில்தான்.

● **புளியரை கணேசன், சென்னை.**

*? 'கோலாரில் எம்.ஜி.ஆர். சிலை வைப்பதை அனுமதிக்க மாட்டோம்' என்று ராஜ்குமார் ரசிகர் மன்றத் தலைவர் கூறியிருக்கிறாரே?*

! வீண் வம்பை விலைக்கு வாங்குகிறார். தமிழர் அதிகம் வாழும் பகுதி, கோலார் தங்க வயல். மக்களின் உணர்வுகளைப் புரிந்து செயல்படுகிறவனே நல்ல தலைவன்.

● **ம. செந்தில்நாதன், மதுரை.**

*? ஜெயலலிதா நீடூழி வாழ சபரிமலை சென்று படி பூஜையும் 1008 வெள்ளி கவச குண்டல பூஜையும் செய்யப் போகும் கோவை செல்வராஜின் பக்தி அ.தி.மு.க. 'மந்திரி'களைப் பொறாமைப்பட வைத்து விட்டதே?*



• குமுறி... அழுது...

! பொறாமைப்படுவானேன்? அவர் வெள்ளியில்தானே செய்கிறார்? இவர்கள் தங்கத்தால் 1008 கவச குண்டல பூஜை செய்தால் ஆயிற்று!

● **ஜகன் ரகு, வேலூர்.**

*? 1977ல் திட்டமிட்ட கொத்தவால்சாவடி மாற்றம் இன்னமும் நடைபெறவில்லை. திரைப்பட நகர் அமைப்பு இப்போ தேவையா?*

! மக்களின் அன்றாட நல்வாழ்வுக்கு சினிமா முக்கியமா? கொத்தவால்சாவடி முக்கியமா? புரியாமல் கேட்கிறீரே!

> ❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
> மு. இரவிச்சந்திரன்,
> 19 ஏ, அந்தோணிசாமி தெரு,
> சாமிநாதபுரம், சேலம்.
> 636 009.

## சென்ற வாரம்...

**ராதிகா - வெங்கட்டின் இளம் மனைவி. திடீரென்று தூக்கு மாட்டிக் கொண்டு தற்கொலை செய்து கொள்கிறாள். தீராத வயிற்று வலியே தனது இந்த முடிவுக்குக் காரணம் என்று கடிதம் எழுதி வைக்கிறாள். விஷயத்தைத் தனது சித்தப்பாவிடம் வெங்கட் சொல்லிப் பதற, அவர் போலீஸுக்குத் தகவல் தருகிறார். இன்ஸ்பெக்டர் தங்கமுத்து, ராதிகாவின் உடலைச் சந்தேகத்தோடு பார்க்கிறார்...**

ராதிகாவின் உடல் கீழே இறக்கி படுக்க வைக்கப்பட்டது. இன்ஸ்பெக்டர் தங்கமுத்து இரண்டு கைகளையும் பின்புறம் கட்டிக் கொண்டு, அந்த உயிர் விலக்கின முகத்தில் படிந்திருந்த இறுதி விநாடிகளின் போராட்டமான அவஸ்தை முத்திரைகளைக் கவனித்தார்.

பெண்ணே, எவ்வளவு இளமையாக இருக்கிறாய்? இப்படிச் சிற்பமாக வளர்ந்து நிற்க நீ எடுத்துக் கொண்ட வருடங்கள் எத்தனை? ஒரு வருடத்திற்கு எத்தனை மொத்த விநாடிகள்! ஆனால், எல்லாவற்றையும் உதறி உருக்குலைக்க... ஒரே ஒரு விநாடி!

கால்களுக்குக் கீழே ஸ்டூலை உதைக்க எத்தனித்த அந்தக் கடைசி விநாடிதான் மகத்தானது. மகா அழுத்தமான தீர்மானமும், தீவிரமும் இருந்தாலொழிய, அது சாத்தியமே இல்லை. ஒரு குட்டித் துணுக்காகத் தயக்கம் எட்டிப் பார்த்திருந்தாலும் போதும்... உன் தீர்மானம் உடைந்து நொறுங்கிப் போயிருக்கும். அல்லது ஒத்திப் போடப்பட்டிருக்கும்.

இந்த உலகை விட்டு, உன் உணர்வுகளை விட்டு காணாமல் போய் விடுவதில், இல்லவே இல்லாமல் போய் விடுவதில் நீ அத்தனை தீர்மானமாக இருந்தாயா பெண்ணே? நிஜமாகவா? பெரிய எழுத்தில் **ஏன்?**

கழற்றிக் கையில் பிடித்திருந்த தொப்பியுடன் ராதிகாவின் இமையொன்றின் மேல் சுதந்திரமாக வந்தமரும் ஈ ஒன்றையே பார்த்துக் கொண்டிருந்தார் இன்ஸ்பெக்டர் தங்கமுத்து.

தன்னுடைய பன்னிரெண்டு வருட போலீஸ் அனுபவத்தில் பிரேதங்கள் அவருக்குப் புதிதில்லை. என்றாலும் அவரை ரொம்பவும் சிந்தனையில் ஆழ்த்துவது தற்கொலைகளே. அதிலும் இளம் வயதுப் பெண்களின் தற்கொலைகள் அவரை அசைத்து விடும்.

அவரது அபிப்பிராயத்தில் சுலபம் போலத் தெரிந்தாலும் தற்கொலை என்பது மகா கஷ்டமான விஷயம். நல்ல மனநிலையில் இருக்கும் ஒரு நபர் தன்னையே கொலை செய்து கொள்வது அகராதிப் பார்



# இமைக்காத இரவு

பட்டுக்கோட்டை பிரபாகர்

வையில் கோழைத்தனமாகப் படலாம். அனுபவப் பார்வையில் அது மகா துணிச்சலான காரியம்.

'உயிரைப் பணயம் வைத்துச் சண்டைக் காட்சியில் நடித்தார்' என்று ஒரு சுதாநாயகனைப் பாராட்டுகிறோமா, இல்லையா? 'என் உயிரே போனாலும் சரி, நாட்டு ரகசியத்தைச் சொல்ல மாட்டேன்' என்று அவன் வசனம் பேசினால் கைதட்டுகிறோமா இல்லையா? 'உனக்காக என் உயிரையும் கொடுப்பேன்' என்று காதலியிடம் வசனமடிக்காத காதலன் உண்டா?

இவை எல்லாம் உணர்த்துவது என்ன? உலகத்திலேயே உயர்வான விஷயம் உயிர் என்பதைத்தானே? அந்த உயிர் இருந்தால்தானே அன்பு, காதல், நட்பு, பகை, சண்டை, வெற்றி, புகழ், பணம், பெருமை, தியாகம், மரியாதை, ஆசை... எல்லாம்! அப்படிப்பட்ட உயிரை 'இனிமேல் எனக்கு வேண்டாம்' என்று தள்ளி வைத்துவிடுவது சாதாரணமான காரியமா?

அதற்கு ஒப்புக் கொள்ளும்படியான காரணம் இருந்தாலொழிய தங்கமுத்து சமாதானமாவதே இல்லை. மிக மிக மிகப் பெரிய காரணம்!

தங்கமுத்து அறையை மீண்டும் ஒருமுறை பார்வையிட்ட பின்னர் இறங்கி வந்து போன் மூலம் உடலை அரசாங்க ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்வதற்கான ஏற்பாடுகளைச் செய்து விட்டு, சோபாவில் அமர்ந்து, முழங்கால்களுக்குள் தலையைப் புதைத்துச் சன்னமாக விம்மிக் கொண்டிருந்த வெங்கட் அருகில் வந்தமர்ந்தார்.

வெங்கட்டின் சித்தப்பா வீட்டு வாசலில் நின்று சிலரிடம் பணம் எண்ணிக் கொடுத்து, ராதிகாவின் இறுதிப் பயணத்திற்கான காரியங்களுக்கு உத்தரவுகள் கொடுத்துக் கொண்டிருக்க...

''மிஸ்டர் வெங்கட்'' என்று அவன் தோளில் கைவைத்தார் தங்கமுத்து.

செவேல் என்று சிவந்து போயிருந்த, வழியும் கண்களுடன் நிமிர்ந்த வெங்கட் மூக்கை உறிஞ்சிக் கொண்டான்.

"உங்களோட சூழ்நிலை ரொம்ப மோசமானதுதான். ஆனா தற்கொலை ஒரு பதிவு செய்ய வேண்டிய குற்றம். அதைப் பத்தி விசாரிக்க வேண்டியது என் கடமை. கொஞ்சம் ஒத்துழைக்க முடியுமா? எதுக்காக உங்க மனைவி தற்கொலை செய்துக்கிட்டிருக்காங்க?'' என்றார் தங்கமுத்து.

வெங்கட், ராதிகா எழுதின அந்தக் கடிதத்தைச் சட்டைப் பையிலிருந்து எடுத்துக் கொடுத்தான்.

இன்ஸ்பெக்டர் அதை இரண்டு எல்லை முனைகளில் பிடித்து வார்த்தை, வார்த்தையாக நிதானமாகப் படித்துப் பார்த்தார்.

அவர் படித்து விட்டு நிமிர்ந்ததும், தான் பெங்களூர் சென்று இரவு இரண்டு மணிக்கு வீடு திரும்பியதையும், காலையில் எழுந்து அவளைத் தேடி மாடி அறையில் பிணமாகப் பார்த்து அதிர்ந்து போய் சித்தப்பாவிடம் ஓடியதையும் விவரித்தான் வெங்கட்.

"பெங்களூருக்கு என்ன விஷயமாய்ப் போயிருந்தீங்க?'' என்று கேள்வியைத் துவங்கினார் தங்கமுத்து.

"ஆபீஸ் வேலையாப் போயிருந்தேன்."

"ராத்திரி ரெண்டு மணிக்கு நீங்க வீட்டுக்கு எதில வந்தீங்க?''

"ஆட்டோல."

"அப்போ கதவு திறந்தது யாரு?''

"ராதிகாதான்."

"அவங்க உங்களைப் பார்த்ததும் ஆச்சரியப்பட்டாங்களா?''

"ஆமாம். நான் நாளைக்குத்தான் வர்றதா இருந்தேன். இன்னைக்கே புறப்பட்டதை அவளுக்குத் தெரிவிக்கவுமில்லை. அதனால ஆச்சரியப்பட்டா."

"அப்போ அவங்க சந்தோஷமான மனநிலையில இருந்தாங்களா?''

"இல்லை. கொஞ்சம் முகம் வாட்டமாத்

தான் இருந்திச்சு. நான் கேட்டேன், ஏன் ஒரு மாதிரி இருக்கேன்னு."

"என்ன பதில் சொன்னாங்க?"

"நல்லாத் தூங்கிட்டிருந்தேன். தூக்கக் கலக்கம்தான். வேற எதுவுமில்லைன்னு சொன்னா."

"உடனே படுத்துட்டீங்களா?"

"எனக்கு வந்திருந்த மூணு நாலு தபால் களைப் படிச்சுப் பார்த்துட்டு, பசியா இருந்த தால் ஆப்பிள் நறுக்கி சாப்பிட்டுட்டுப் படுத் தேன்."

"உங்க பெங்களூர் பயணம் பத்தி உற் சாகமா விசாரிச்சாங்களா?"

"அவ தூக்கக் கலக்கத்தில இருந்ததால எல்லாம் காலைல பேசிக்கலாம்னு படுத்துட் டேன். பெங்களூர்லேர்ந்து அவளுக்காக வாங்கிட்டு வந்திருந்த பெங்கால் காட்டன் ஸாரியைக் கூட எடுத்துக் காட்டலை."

"சரி. படுத்ததும் முதல்ல அவங்க தூங்கி னாங்களா, இல்லை நீங்க தூங்கினீங்களா?"

## அடுத்த இதழில்....

**●● உலகத் தமிழ் மாநாடும் உள்ளூர்த் தமிழர் திண்டாட்டமும்.**

**- ஒரு நேரடி ரிப்போர்ட்**

**●● வீணாகிறதா மாணவர் சக்தி?**

**- ஓர் அலசல்**

"இதை எப்படி சார் சொல்ல முடியும்? விளக்கணைச்சிட்டு படுத்துட்டோம். தட்ஸ் ஆல்."

"அப்படியில்லை. படுத்ததுக்கப்புறம் நீங்க ஏதாவது பேச்சுக் கொடுத்திருந்து அதுக்கு அவங்க பதில் சொல்லலைன்னா அவங்க முதல்ல தூங்கிட்டதா அர்த்தம். இல்லையா?"

"யு ஆர் ரைட் சார். படுத்ததுக்கப்புறம் 'டீ.வி. ரிப்பேர் பண்றதுக்குக் கம்பெனில சொல்லிருந்தேன், ஆளுங்க வந்து ரிப்பேர் பண்ணிட்டுப் போனாங்களா'ன்னு கேட் டேன். அதுக்கு அவகிட்டேர்ந்து பதில் இல்லை. ஸோ, அவ முதல்ல தூங்கிட் டான்னு சொல்லலாம்."

"காலைல நீங்க அலாரம் வெச்சிருந் தீங்களா?"

"இல்லை. சாதாரணமாவே அஞ்சரை மணிக்கு நான் எழுந்துடுவேன். அப்படித் தான் எழுந்தேன். ராதிகா ஆறரைக்குத்தான் எழுந்திருப்பா. பக்கத்தில அவளைக் காண லைன்னதும் பாத்ரூம் போயிருப்பான்னு தான் நினைச்சேன். பாத்ரூம்ல இல்லை. சமையலறையிலயும் அவ இல்லை. அதனால பதற்றமாய்டுச்சி. அப்புறம்தான் மாடிக்குப் போய்ப் பார்த்தேன்."

"அந்த ரூம் கதவுகள் மூடியிருந்திச்சா?"

"இல்லை. திறந்துதான் இருந்திச்சி."

"பார்த்ததும் உங்க ரியாக்ஷன் என்னவா இருந்திச்சி?"

"என் வாழ்க்கையிலேயே இது உச்சமான அதிர்ச்சி சார்! சில ஸெகண்ட்ஸ் எனக்கு மூச்சே நின்னு போய்ட்ட மாதிரி இருந்திச்சு. அப்புறம்தான் எனக்கு எல்லாம் உறைச்சது. அலறினேன். கதறினேன். அவ எழுதி வெச் சிருந்த லெட்டரை எடுத்துப் படிச்சேன்."

"லெட்டர் எங்கே வெச்சிருந்தாங்க?"

"தன்னோட ஜாக்கெட்ல செருகி வெச் சிருந்தா."

"உங்களுக்குக் கல்யாணமாகி எத்தனை வருஷமாச்சி?"

"மூணு வருஷமாச்சி."

"அவங்களுக்கு இந்த வயிற்று வலி தொந்தரவு எப்பயிலேர்ந்து இருக்கு?"

"ஒரு வருஷமா இருக்கு. கர்ப்பப் பையிலே கட்டி இருக்குன்னு கண்டுபிடிச்சது ஒரு மாசத்துக்கு முன்னாடிதான்."

"வலி வர்றப்போ அவங்களால தாங்க முடியாதபடி இருக்குமா?"

"ஆமாம். துடிச்சிப் போய்டுவா."

"வாய் விட்டுக் கத்துவாங்களா?"

"பல்லைக் கடிச்சிக்கிட்டு 'அம்மா, அம்மா'ன்னு சொல்லிக்கிட்டே இருப்பா. தலையணையை வெச்சி அமுத்திக்கிட்டு குப்புறப்படுத்து முகத்தைச் சுளுச்சு முன குவா. பார்க்கறப்ப ரொம்ப கஷ்டமா இருக் கும்."

"ஒரு எம்பாரஸிங் கொஸ்டின். கேக்கற துக்கு மன்னிக்கணும். உங்களுக்குள்ளே தாம் பத்திய உறவு எப்படி?"

"கர்ப்பப்பையில கட்டின்னு கண்டு பிடிச்சி சொன்ன டாக்டர் மருதுபாண்டி யன், ஆபரேஷன் முடிஞ்சு தான் சொல்ற வரைக்கும் தாம்பத்திய உறவு வேணாம்னு சொல்லியிருந்தார். அதனால ஒரு மாசமா எங்களுக்குள்ளே உறவில்லை."

"இது தற்கொலைதான்றதிலே உங்களுக்கு ஏதாவது சந்தேகம் இருக்கா மிஸ்டர் வெங் கட்?"

"தற்கொலை இல்லாம வேற என்ன சார்?"

"இல்லை, கேட்டேன். இந்த கையெழுத்து உங்க மனைவி ராதிகாவோட கையெழுத்துத் தானே? அதில எந்த சந்தேகமும் இல்லையே?"

**இதோ ஒரு புதிய திட்டம்!**

# உங்கள் முதலீடு 5 ஆண்டுகளில் இருமடங்கு ஆகிறது (ரூ.5,000 = ரூ.10,000)



**நீங்கள் ஸ்ரீராம் டிரஸ்டில் ரூ. 5,000/– முதலீடு செய்தால் 5 ஆண்டுகளில் ரூ. 10,000/– ஆக திரும்பக் கிடைக்கிறது**

***அதுமட்டுமா?***

**அமுதசுரபி 5 ஆண்டுகளுக்கு இலவசம்**

47 ஆண்டுகளாகச் சிறப்பாக நடைபெற்று வரும் இலக்கிய மாத இதழ், (இப்போதைய விலை ரூ. 6/– வருங்காலத்தில் கூடுதல் விலைக்கு விற்றாலும்) 5 ஆண்டுகளுக்கு இலவசம்.

**அமுதசுரபி தீபாவளி மலர் 5 ஆண்டுகளுக்கு இலவசம்**

விலைமதிப்பற்ற பொக்கிஷமான அமுத சுரபி தீபாவளி மலர் (இந்த ஆண்டு தீபாவளி மலர் விலை ரூ. 40. வருங்காலத்தில் கூடுதலாக விற்றாலும்) 5 ஆண்டுகளுக்கு இலவசமாக எம் செலவில் அனுப்பப்படும்.

***இவை தவிர***

**போனஸ் 1 :**

30.10.94 க்குள் சேர்பவர்களுக்கு 1995 ஆம் ஆண்டு ராமர் பட்டாபிஷேக வண்ணப்பட தினசரிக் காலண்டர் அன்பளிப்பு.

**போனஸ் 2 :**

5000 முதலீட்டுத் தொகை கிடைத்த வுடன் ஸ்ரீ ஜகத்குரு மகா காவியம் (மஹா சமாதி அடைந்த மஹா பெரியவரின் சரித்திரம். காப்பியப் போட்டியில் 'இந்தியன் வங்கி பரிசு' பெற்றது). அன்பளிப்பாக வழங்கப்படும்.

30.10.94–க்குள் சேர்பவர்களுக்கே தினசரி காலண்டர் இலவசமாக அளிக்கப்படும்.




**அமுதசுரபி ஸ்ரீராம் டிரஸ்ட்**

ரூ.5000 செக்/டிராப்ட் அனுப்ப வேண்டிய முகவரி:
"ஸ்ரீராம் டிரஸ்ட்" (Shriram Trust)
145, லிங்கிச் செட்டி தெரு
சென்னை - 600 001. போன்: 5228545.

ADWAVE/ST4814

We accept Fixed Deposits at the rate of 24% with incentives.

# நீங்கள் சொந்த வீடு வாங்க இதுவே சரியான நேரம்

காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீமின் வெற்றிகரமான 14-வது குலுக்கல் 30.10.94 அன்று காசி திரையரங்கு வளாகத்தில் பிரபல திரைப்பட நட்சத்திரங்களின் முன்னிலையில் நடைபெற உள்ளது.

இத் திட்டத்தில் புதிதாக வழங்கப்பட்ட GIFT CARD குலுக்கல் மூலம் உறுப்பினர்களை தேர்ந்தெடுத்து கவர்ச்சிகரமான சிறப்புப் பரிசுகள் வழங்கப்பட்டன.

இத் திட்டத்தில் ரூ. 1,250/- முதல் ரூ. 5,000/- வரை மாதத் தவணைகளாகச் செலுத்தி குலுக்கல் மூலம் 277 முதல் 1111 சதுர அடிகள் வரை உள்ள வீடுகளைத் தேர்ந்தெடுத்து சொந்த வீடாக்கிக் கொள்ளலாம். மீதித் தொகையை சொந்த வீட்டிலிருந்து கொண்டே வாடகை போல செலுத்தலாம். இத் திட்டத்தில் சேருபவர்கள் அனைவருக்கும் ரூ. 300/- முதல் ரூ. 1,000/- வரை ஒவ்வொரு கவர்ச்சிகரமான பரிசுகள் வழங்கப்படும்.

## சுபமங்களா திட்டம் :

இத் திட்டத்தில் உடன் குடிபுகத் தயாரான நிலையில் உள்ள வீடுகளின் மொத்த விலையில் ரூ. 10,000/- மட்டுமே செலுத்தி உடனே சொந்த வீட்டில் குடியேறலாம். மீதித் தொகைக்கு நாங்கள் கடன் உதவி ஏற்பாடு செய்து தருகிறோம். இத் திட்டத்தில் வீடு பதிவு செய்பவர்கள் அனைவருக்கும் ரூ. 1,000/- மதிப்புள்ள கவர்ச்சிகரமான பரிசுகள் வழங்கப்படும்.

## வீடு கிடைக்கும் இடங்கள் :

சென்னை கே. கே. நகர் மேற்கு, விருகம்பாக்கம், வளசரவாக்கம், சாலிகிராமம், வடபழனி, குமரன் காலனி, கில் நகர் போன்ற இடங்களில் வீடுகள் கட்டித் தருகிறோம்.

**ஒரு சதுர அடியின் விலை ரூ. 450/- மட்டுமே!**

## FIXED DEPOSITS :

நீங்கள் முதலீடு செய்யும் வைப்பு நிதித் தொகைக்கு 24% வட்டியுடன் ஊக்கப் பரிசுகளும் வழங்கப்படுகிறது. மேலும் கூட்டு வட்டி வைப்பு நிதியில் நீங்கள் முதலீடு செய்யும் தொகை 3½ ஆண்டுகளில் இரட்டிப்பாகிறது.

மேலும் விவரங்களுக்கு :

**காசி ஹவுசிங் & டெவலப்மென்ட் லிமிடெட்**

மற்றும்

**காசி பில்டர்ஸ்**

காசி தியேட்டர் காம்ப்ளக்ஸ்,

91, 92 ஜவாஹர்லால் நேரு சாலை, அசோக் நகர், சென்னை - 600 095.

போன் : 4821969, 4822206 ஞாயிறு முழு நேரம் அலுவலகம் உண்டு.

FAX : 044-4821897




## மோட்டார் சைக்கிள் பரிசுத் திட்டம்! போட்டி — 4

மேலுள்ள படத்தில் இருக்கும் வண்ணத்துப் பூச்சிகளில் இரண்டு மட்டும் ஒரே மாதிரியானவை. அவை எவை? கீழே உள்ள கூப்பனில் ஜோடி சேரும் வண்ணத்துப் பூச்சிகளின் எண்களை குறித்து வைத்துக் கொள்ளுங்கள்.

26 போட்டிகளில், யார் அதிக போட்டிகளில் வெற்றி பெறுகிறாரோ அவருக்கே மோட்டார் சைக்கிள் பரிசு! 26 ஆறுதல் பரிசுகளும் உண்டு.

26 கூப்பன்களையும் மொத்தமாக அனுப்ப வேண்டியது அவசியம் என்பதால் கூப்பன்களை பத்திரப்படுத்தி வையுங்கள். ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

ஜோடி சேரும் வண்ணத்துப் பூச்சிகளின் எண்கள் :..............................................

பெயர், முகவரி :..............................................

..............................................

"இல்லை சார். இது அவ கையெழுத்துத் தான்."

"சரி. நான் ஒப்பிட்டுப் பார்க்கறதுக்கு உங்க மனைவியோட வேற கையெழுத்துக் கொண்ட பேப்பர்ஸ் சிலது வேணும். அவங்களோட மெடிக்கல் ஃபைல் அப்படியே கொடுங்க. நீங்க பயணம் செஞ்ச ஃப்ளைட் டிக்கெட் வெச்சிருந்தா எனக்கு வேணும். அப்புறம் உங்க ஆபீஸ் அட்ரெஸ்."

அவர் கேட்டவற்றையெல்லாம் பத்து நிமிடங்களில் சேகரித்துக் கொடுத்தான் வெங்கட்.

•

"உங்க படுக்கையறையை நான் பார்க்கலாமா?" என்ற தங்கமுத்து அவன் அனுமதியாக எதுவும் சொல்வதற்கு முன்பாகவே அந்த அறைக்குள் நுழைந்து நிதானமாகப் பார்க்கத் துவங்கினார்.

அரை மணி நேரம் கழித்து அறையை விட்டு வெளியே வந்தார்.

ஆம்புலன்ஸ் வந்திருந்தது. ராதிகாவின் உடலை அதில் ஏற்றி அனுப்பி வைத்து விட்டு, பிறகு சந்திப்பதாகச் சொல்லி விடை பெற்று ஸ்டேஷனுக்கு வந்து போன் செய்தார்.

"டாக்டர், இப்ப நான் அனுப்பி வெச்சிருக்கிற ராதிகாங்கிற பொண்ணோட பாடியை போஸ்ட்மார்ட்டம் பண்றப்போ முக்கியமா அந்தப் பொண்ணு நேற்று இரவு உடலுறவு கொள்ளப்பட்டிருக்காளான்னு எனக்குத் தெரியணும் டாக்டர். பாவாடையில ஸ்டைன் இருக்கு. கொஞ்சம் கேர் எடுத்துப் பாருங்க. அதே மாதிரி உயிர் பிரிஞ்ச நேரம் கொஞ்சம் கரெக்ட்டா கணிக்க முடிஞ்சா நல்லது" என்று சொல்லி வைத்தார்.

"என்ன சார் சந்தேகம் உங்களுக்கு?" என்றார் சப்-இன்ஸ்பெக்டர் கதிர்வேல்.

"அது தற்கொலை இல்லையோன்னு சந்தேகம்" என்றார் தங்கமுத்து.

(தொடரும்)

## கனவு மெய்ப்படும் - 4

# மனதில் உறுதி வேண்டும்

ஒரு மரத்தில் கள்ளிக் காக்கையைக் கட்டி வைத்து விட்டு, ஒவ்வொருவராக அழைத்துச் சில கேள்விகளைக் கேட்டார் ஆசிரியர் துரோணர். தருமனுக்கும் அவருக்கும் நடந்த உரையாடல் இது.

"மரம் தெரிகிறதா?"

"தெரிகிறது."

"கிளை தெரிகிறதா?"

"தெரிகிறது."

"காக்கை தெரிகிறதா?"

"தெரிகிறது."

" 'வில்லையும் அம்பையும் கீழே வைத்து விடு' என்றார் துரோணர். பீமனை அழைத்து இதே கேள்வியைக் கேட்டார். அவன் பதில் வித்தியாசமாக இருந்தது. "குருவே ஒரு காக்கையை வீழ்த்த இவ்வளவு கஷ்டப்பட வேண்டுமா? இடது கையால் மரத்தைப் பிடுங்கி, கவிழ்த்து காக்கையை வலது கையால் எடுத்து எறியலாமே" என்றான். பீமன் தனி யுனிவர்சிடி தொடங்க வேண்டியவன். துரியோதனனும் எல்லாம் தெரிகிறது என்றான்.



அருச்சுனன் பதிலோ வித்தியாசமாக இருந்தது!

"மரம் தெரிகிறதா?"

"இல்லை."

"கிளை தெரிகிறதா?"

"இல்லை."

"காக்கை தெரிகிறதா?"

"இல்லை."

மரமும் காக்கையும் அருச்சுனனுக்குத் தெரியவில்லை என்பதில் துரியோதனனுக்குப் பரம சந்தோஷம். எதிரி அருச்சுனனுக்குக் கண்பார்வை மங்கி விட்டது என்ற அல்ப மகிழ்ச்சி அவனுக்கு. தன் பலத்தால் வெல்லுவதை விட எதிரியின் பலவீனத்தால் தான் ஜெயிப்பது என்பது துரியோதன அரசியல்.

"மரமும், கிளையும் காக்கையும் தெரியவில்லை என்றால் உனக்கு என்னதான் தெரிகிறது?" என்றார் துரோணர்.

"காக்கையின் கழுத்து மட்டும் தெரிகிறது" என்றான் அர்ச்சுனன். துரோணர் மகிழ்ந்து, "அம்பை விடு" என்றார். காக்கை அறுந்து விழுந்தது. இலட்சியத்தில் அருச்சுனன் எப்படி இருந்தான் என்பதற்கு இது அடையாளம். இலட்சியத்தில் மனம் குவிகிற போது எதையும் சாதிக்க முடியும்!

காகிதம் எரிகிற இயல்புடையது. சூரியன் எரிக்கிற இயல்புடையது. ஒரு பூதக் கண்ணாடியால் சூரிய நெருப்பைக் குவித்து, காகிதத்தில் செலுத்தினால் பற்றி எரியும். குவித்துச் செலுத்துவது அவசியம். இந்த மன ஒருமையே ஏகாக்ரதை எனப்படும். இதை அடைவதே யோகியின் முதல் வேலை. வெற்றி மாளிகையின் சாவியே இந்த மன ஒருமைதான்.

> தன் பலத்தால் வெல்லுவதை விட எதிரியின் பலவீனத்தால் தான் ஜெயிப்பது என்பது துரியோதன அரசியல்.

துப்பாக்கி சுடும் போட்டி விளையாட்டாக நடக்கும் இடத்தில் சுவாமி விவேகானந்தர் சென்றிருந்தார். பல பேர் இலக்கைச் சுட முடியாத போது அனாயாசமாக அதைச் செய்து முடித்தார் சுவாமி. "எப்படி முடிந்தது - எவ்வளவு நாள் பழக்கம்" என்றார்கள். "மனத்தை ஒருமுகப்படுத்திச் செய்தேன். முதல் முறையே பலித்தது" என்றார் விவேகானந்தர். மனம் ஒருமைப்பட்டால்தான் எல்லா வெற்றியும். விவேகானந்தரால் முடியும் என்றால் உன்னாலும் என்னாலும் நிச்சயம்

**சுகி சிவம்**

முடியும்.

இந்த மன ஒருமை சுலபமா என்று அர்ச்சுனன் சந்தேகப்பட்டு கிருஷ்ணனைக் கேட்கிறான். 'அப்பியாசம்' அதாவது 'பயிற்சி' ஒன்றே வழி என்கிறார் கண்ணன். பளு தூக்கும் போது ஒரே நாளில் அத்தனை பாரமும் தூக்கி விட முடியுமா? கொஞ்சம் கொஞ்சமாகக் கூட்டி கூட்டி, நேரத்தை அதிகரித்து அதிகரித்து பிறகுதான் போட்டிகளில் வெற்றி பெறுகிறார்கள். ஒலிம்பிக் தங்கப் பதக்கம் வாங்குபவர்கள் அதற்கு முன்பு எத்தனை நாள் முயற்சி செய்தார்கள் என்பது யாருக்குத் தெரியும். மேடையில் இலட்சக்கணக்கான இரசிகர்களைக் கவரும் பாடகர்கள் எத்தனை ஆண்டுகள் பாடிப் பாடிப் பழகி இருக்கிறார்கள் என்பது யாருக்குத் தெரியும்? எனவே பொறுமை, விடா முயற்சி, ஓயாத பயிற்சி இவையே யோகியின் ஏணிப் படிகள்.

இந்த முயற்சியில் தோல்வி நேர்ந்தாலும், இடையிலேயே மரணம் வந்தாலும் வருந்த வேண்டியது இல்லை. காரணம் மரணம் இடைக்காலமானது. மீண்டும் அடுத்த பிறவியில் எடுத்த எடுப்பிலேயே இந்த முயற்சி கைகொடுக்கும். இப்போது சேகரித்த சேமிப்பு அடுத்த பிறவியின் தொடக்கத்திலேயே கணக்கில் வரும் என்கிறது கீதை. எனவே எப்படியும் முயற்சியும் பயிற்சியும் நிறுத்தப்படக் கூடாது. தொடர வேண்டியவை.

சித்தத்தின் ஒருமுனைப் பாங்கு இருக்குமானால் முதுமை என்பது மனிதனைத் தாக்காது. திறமை குறையாது. மனிதனுக்கு வயது ஆக ஆக, முதுமை ஏற ஏற அவன் மனம் அதிக உறுதிபெற வேண்டும். பழம் வெளியே அழுகினாலும், விதை உள்ளே கெட்டிப்பட்டுக் கொண்டே வருகிறது. இதே போலத்தான் உடம்பு தளரத் தளர ஆன்மா கெட்டிப்பட வேண்டும். அதாவது ஆன்மாவில் மனம் உறுதிப்பட வேண்டும். இவையனைத்தும் சித்தத்தின் ஒருமுனைப் பாங்கால் சாத்தியமாகிறது என்கிறார் ஆசார்ய வினோபாபாவே.

சித்தத்தின் ஒருமுனைப் பாங்கு பெற சுழன்று கொண்டே இருக்கும் மனச் சக்கரத்தைத் தடுத்து நிறுத்த வேண்டும். அதற்கு வரம்பான வாழ்க்கை முறை அவசியமாகிறது.

வரம்பற்ற வாழ்க்கை முறைகள் மனத்தை மேலும் மேலும் அலைபாய விடுகிறது. எனவே வாழ்க்கையை வரம்புக்குள் கொண்டு வர வேண்டும். தேவைகள் பெருகப் பெருக வரம்புகள் அழிகின்றன. டீ.வி.யில் எத்தனை சேனல்கள் வந்தாலும் திருப்தி இல்லை. ஆடைகள் எத்தனை இருந்தாலும் இன்னும் வேண்டி இருக்கிறது. எத்தனை கார்கள் எத்தனை வீடுகள்



வந்தாலும் இன்னும் பட்டியலில் கொஞ்சம் பாக்கி இருக்கிறது. இவற்றை வரம்புக்குள் கொண்டு வராவிட்டால் மனம் எப்படி சாந்தி அடையும்? எனவே எல்லா விஷயத்திலும் ஓர் எல்லை வகுத்துக் கொள்வது நல்லது.

மனம் ஒருமையடைய வாழ்க்கையின் மீதான நமது பார்வை மாற வேண்டும். சஞ்சலம், பயம், கவலை இவைதான் வெகுவாக நமது மன ஒருமைப்பாட்டைப் பாதிக்கின்றன. "அஞ்சுவது யாதொன்றும் இல்லை. அஞ்சவருவதும் இல்லை" என்ற திருநாவுக்கரசரின் தெளிவு வந்து விட்டால் - அச்சம் இல்லாத போது - மனம் எளிதில் ஒன்றில் குவிகிறது.

(தொடரும்)




♦ அட்டை மிகப் பிரமாதம்! பி.ஸி. க்கு பின்புறம் பேட்டை ரவுடிகள் போல சில நபர்களை வரைந்து, "அண்ணாச்சி எனக்கு பல வருட நண்பர். மிக நல்லவர்!" என்று சொல்லுவதாக எழுதி இருக்கலாம்! இன்னும் 'டாப்' ஆக இருந்திருக்கும்!
திருச்சி - 8, எம். சரஸ்வதி.

♦ காவல் துறையினரின் செயல்களையும் அதற்கான பின்னணிகளையும் விமர்சித்த கல்கி, அவர்களின் துன்பங்களை எண்ணிப் பார்க்கவில்லையே! மற்ற துறைகளுடன் ஒப்பிட சம்பளம் மிகக் குறைவு. வேலை நிறுத்தம் செய்து வசதிகளுக்குப் போராட முடியாது. லீவு, வேலை நேர நிர்ணயம் இல்லை. நியாயமாக நடக்கப் பார்க்கும் போலீஸ் அதிகாரிகள் பல சமயங்களில் அரசியல் தலையீடு காரணமாக தண்டிக்கப்படுகிறார்கள். காவல் துறைக்கு ஆட்கள் தேர்விலும் பயங்கர ஊழல். முதல்வர் சென்ற ஆண்டு திருச்சிக்கு மாலை நாலு மணிக்கு வந்தார். காலை எட்டு மணி முதலே போலீஸார் சோறு, தண்ணீர் இன்றி நிறுத்தப்பட்டனர். முதல்வர் சென்ற பிறகு புளி சோறு பொட்டலங்கள் ஜீப்பிலிருந்த படி காவலரை நோக்கி வீசி எறியப்பட்டன. ஜீப்பைத் தொடர்ந்து ஓடி காவலர் 'காட்ச்' பிடித்தனர். ஏன், போலீஸாரையும் மனிதர்களாக நடத்தக் கூடாதா? இந்நிலைகள் மாறினால் போலீஸாரும் சரியாக நடந்து கொள்வார்கள்.
சென்னை, ஆர். ஸ்ரீராம்.

♦ 'கரம் மசாலா' மிகவும் மணமாயிருந்தது. காரசாரமான இதுபோன்ற 'நொறுக்குத் தீனி' விருந்தை வாரா வாரம் தேடிக்கிட்டே இருக்கப் போகிறோம்!
சென்னை - 78,
சி. பூங்கோதை குப்புஸ்வாமி.

♦ 'அம்மா பறக்கிறார், பராக்' - கார்ட்டூன்களை அமர்க்களமாகப் போட்டு அட்டகாசப் படுத்தியிருக்கும் மதிக்கு ஓர் ஆளுயர கட்அவுட்டாவது வைக்கணும்னு மனசு அடிச்சுக்குதுங்க!
மணக்காடு, ஸ்ரீவஹிதாமேரி.

♦ "ஒரு புலியின் மரணம்; ஓராயிரம் புலிகள், கவனம்!" - தலையங்கம் தமிழகத்தையும் இந்தியாவையும் பாதுகாக்கக் கடமைப்பட்டவர்கள் கவனத்திற்குச் செல்ல வேண்டும்; அவர்களும் கவனத்தில் கொள்ள வேண்டும்.
திருத்துறைப்பூண்டி,
கா. இராமச்சந்திரன்.

♦ "மீன் இனி சிக்கும்" சத்யா ஸ்ரீனிவாசனின் கதை மிக அருமை. படித்த வேலையில்லாதவர்களின் மனம் படும் பாட்டை மிக நன்றாக எடுத்துக்காட்டி விட்டார். கிடைக்கும் சிறு வாய்ப்பையும் நழுவ விடக் கூடாது என்பதை நன்கு உணர்த்தி விட்டார். பிரச்னையையும், தீர்வையும் இதைவிடத் தெளிவாக உணர்த்த முடியாது.
திருப்பூர், வீ. சண்முகப்பிரியா.

♦ வாழ்க்கையின் அர்த்தத்தை மிக எளிய முறையில் அறியச் செய்தது, சுகன்யாவின் 'அவன் அவர் ஐந்தே கால் ரூபாய்' சிறுகதை!
மாங்குடி, எஸ். ஜெய்சங்கர்.

♦ இன்றைய அரசியல் அவலங்களை அழகாக வடிவமைத்துக் காட்டிய நா. வே. அருளின் 'கோட்டைக்குள்ளே எலி இருந்தால்' கவிதை உள்ளத்தை தொட்டது; உணர்வைச் சுட்டது!
அருங்குருக்கை,
அ. கிருஷ்ணமூர்த்தி.

♦ "சட்டத் தளர்த்தலும் தங்கக் கடத்தலும்" கட்டுரை படித்தேன். நம் சுங்கத்துறை மிகத் திறமையானதுதான். என்றாலும் வேகாத வெயிலில் வெளிநாட்டில் வியர்வை சிந்தி சம்பாதித்துத் தன் ஆசை மனைவிக்கோ அன்பு மகளுக்கோ வாங்கி வரும் புடைவையையோ மற்ற பொருட்களையோ ஏர்போர்ட்டில் சில கஸ்டம்ஸ் அலுவலர்கள் தங்கள் மனைவிகளுக்கு என்று பறித்துக் கொள்ளும் அநியாயத்தை என்னவென்று சொல்ல? யாரிடம் சொல்ல?
தஞ்சாவூர் - 7,
வளர்மதி ஆசைத்தம்பி

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, எக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

